மாலை 49 மணி 3 மார்ச் 2007 விலை ரூ10



# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை வெளியீடு



## பங்குனி உத்திரத் திருவிழா



# அருள்மிகு மகாமாரியம்மன் திருக்கோயில்

**வரதராஜம்பேட்டை, வலங்கைமான் - 612804,**
**திருவாரூர் மாவட்டம். போன் - 04374 - 264575.**

பேரன்புடையீர்!

சோழ வளநாட்டின் காவிரியின் வடபாலும், தென்பாலும் நிறைந்த பாடல் பெற்ற தலங்கள் உள்ளன. கும்பகோணத்திற்கு தென்பாலும், ஆலங்குடிக்கு வடபாலும், வலங்கைமான் நகர் அழகுடன் அமைந்துள்ளது. இங்கு ''குடமுருட்டி'' ஆற்றின் தென்பகுதியில் கோயில் கொண்டு பக்தர்களின் குறை களைந்து அருள்பாலிக்கும் கலியுகத்தின் கண்கண்ட தெய்வமாக விளங்கிவரும் வரதராஜம்பேட்டை, அருள்மிகு சீதளாதேவி என்கிற மகாமாரியம்மனுக்கு பங்குனிப்பெருவிழா நிகழும் விய ஆண்டு மாசி திங்கள் 27ந் தேதி (11.3.2007) ஞாயிற்றுக்கிழமை திருவிழா தொடங்கி பங்குனித்திங்கள் 4ந் தேதி (18.3.2007) ஞாயிற்றுக்கிழமை முதல் பங்குனித்திங்கள் 25ந்தேதி (8.4.2007) ஞாயிற்றுக்கிழமை முடிய நிகழ்ச்சி நிரலில் கண்டுள்ளவாறு மிகச்சிறப்பாக நடைபெற உள்ளது.

இத்தலத்தின் மகிமையே பாடைக்காவடித் திருவிழாதான். தமிழகத்திலேயே பாடைக்காவடி எடுப்பது இத்திருத்தலத்தில்தான் என்பது குறிப்பிடத்தக்கது. மருத்துவரால் கைவிடப்பட்ட பக்தர் அம்பிகையிடம் ''எனக்கு உயிர்ப்பிச்சைதா உனக்குப் பாடைக்காவடி எடுக்கிறேன்'' என பிரார்த்தனை செய்து, உயிர் பிழைத்து ''பாடைக்காவடி'' எடுப்பது இத்தலத்தின் சிறப்பாகும்.

**பங்குனி பெருந்திருவிழா முக்கிய திருவிழாக்கள்**

| | | | |
|---|---|---|---|
| மாசி மீ25 - | 9.3.2007 வெள்ளி | - | பூச்சொரிதல் |
| மாசி மீ27 - | 11.3.2007 ஞாயிறு | - | முதல் காப்பு |
| பங்குனி 4 - | 18.3.2007 ஞாயிறு | - | இரண்டாம் காப்பு |
| பங்குனி 11- | 25.3.2007 ஞாயிறு | - | பாடைக்காவடி பெருந்திருவிழா |
| பங்குனி 18- | 01.4.2007 ஞாயிறு | - | புஷ்பப்பல்லக்கு |
| பங்குனி 25- | 08.4.2007 ஞாயிறு | - | கடைஞாயிறு விழா. |

அன்பர்கள் அனைவரும் வருகை தந்து திருவிழாவில் கலந்து கொண்டு அம்மனின் திருவருள் பெற அன்புடன் வேண்டுகிறோம்.

இத்திருக்கோயிலைப் பற்றிய விபரங்களை www.mahamariamman Temple.org என்ற வெப்சைட் மூலம் தெரிந்து கொள்ளலாம். தொகை அனுப்புவோர் tn.temple.org வெப்சைட்டில் E.Pooja திட்டம் மூலம் திருக்கோயில் பெயரில் கிரடிட் கார்டு மூலம் தொகை செலுத்தலாம். அல்லது ICICI வங்கி கணக்கு எண்.608101 081460ல் தொகையை செலுத்தி பெயர், நட்சத்திரம், இராசி மற்றும் முழு முகவரி அடங்கிய விபரங்களுடன் தொகை செலுத்திய ரசீதை ஆலய முகவரிக்கு அனுப்பி வைத்து பிரசாதம் பெற்றுக் கொள்ளலாம்.

இத்திருக்கோயிலுக்கு வருகை தரும் பக்தர்களுக்கு தினசரி 100 நபர்களுக்கு நித்திய அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது. 100 நபர்களுக்கு அன்னதானம் வழங்கிட ரூபாய் 1200/- நன்கொடையினை பணமாகவோ அல்லது பொருளாகவோ வழங்கலாம். அல்லது ரூபாய் 15,000/- வழங்கினால் நிரந்தர முதலீடாக வைத்து அதில் வரும் வட்டியைக் கொண்டு ஆண்டுக்கு ஒரு நாள் உங்கள் மணநாள், பிறந்த நாள், குழந்தைகள் பிறந்தநாள் மற்றும் முக்கிய நாட்களில் உங்கள் பெயரில் அன்னதானம் வழங்கப்படும். நீங்கள் வழங்கும் தொகைக்கு வருமான வரி விலக்கு உண்டு. தொகை / DD அனுப்ப வேண்டிய முகவரி ''நிர்வாக அதிகாரி, அருள்மிகு மகாமாரியம்மன் திருக்கோயில், வலங்கைமான்-612804. திருவாரூர் மாவட்டம்''.

**அனைவரும் வருக!** **அம்மன் அருள் பெறுக!**

இங்ஙனம்

சு.ஞானசேகரன்,பி.காம்.,பி.எல்.,
நிர்வாக அதிகாரி.

ரெ.சீனிவாசகசித்தையா,எம்.ஏ.,பி.எட்.,
தக்கார் / ஆய்வர்.



திருக்கோயில்

திருவள்ளுவர் ஆண்டு 2038 விய- பங்குன
மாலை 49 மணி 3 மார்ச் 200

## அன்பார்ந்த வாசகப் பெருமக்களே!

வணக்கம்.

தமிழ் மாதங்களில் கடைசி மாதமாகவும், இளவேனில் தொடக்கமுமாக வருவது பங்குனித் திங்கள். இம்மாதத்தில் வரும் உத்ர நட்சத்திரத்துடன் கூடிய பௌர்ணமி நாளன்று பங்குனி உத்திரத் திருநாள் அனைத்து திருக்கோயில்களிலும் மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. இதனைச் சிறப்பிக்கும் வகையில் கட்டுரைகள் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

திருமயிலையில் பூம்பாவையை எழுப்ப திருஞானசம்பந்தர் அருளிய பாடல்கள் தமிழ் நாட்டின் எல்லாத் திருத்தலங்களிலும் பன்னிரண்டு மாதங்களிலும் நடக்கும் விழாக்களை அறிந்திடும் வகையில் உள்ளதோடு, பூம்பாவையை எழுப்பியதன் மூலம் கற்பகாம்பாள் உறையும் கபாலீச்சுரமான மயிலைத் திருத்தலத்தை தனித்துணர வைக்கிறது என்ற கருத்தோவியத்தினை தமிழாகரர் தெ. முருகசாமி அவர்கள் இவ்விதழில் வழங்கியுள்ளார்.

பங்குனித்திங்களில், திருவரங்கத்தில் நடைபெறும் ஆதி பிரம்மோற்சவத்தின் எட்டாம் நாள் விழாவான மட்டையடி உற்சவத்தின் மகோன்னதத்தையும், பெருமாள் சார்பில் அரையர் சுவாமிகளும், தாயார் சார்பில் பண்டாரிகளும் உரையாடுவதை மிக அழகாகவும், நேர்த்தியாகவும், இந்திரா ஆராவமுதன் அவர்கள் வழங்கியுள்ளார்.

நெல்லையப்பர் திருக்கோயிலில் வடிக்கப் பெற்றுள்ள சிற்பங்களின் பேரழகை, குறிப்பாக ஐம்புலன் அடக்கத்திற்கு உவமையாகக் கூறப்படும் ஆமை உருவினை. மன்மதன் முதுகில் வடிக்கப்பட்டுள்ளதன் அற்புதத்தினை, விவரிக்கும் கட்டுரையைப் படிக்கும் போதே இக்கலைக்கருவூலத்தை நேரில் காண்பது போன்ற உணர்வினை வழங்கிடும் வகையில் ''ஆயிரம் கதை சொல்லும் நெல்லையப்பர் சிற்பங்கள்'' எனும் தலைப்பில் வடித்துத் தந்துள்ளார் பேராசிரியர் முனைவர் ச. கணபதிராமன் அவர்கள்.

ஆழ்வார்களின் பாடல்களில் ஆழங்கால் பட்டவர்கள் தனிப்பாடல் புலவர்கள், அவர்கள் திருமாலின் அம்சங்களை எவ்வாறெல்லாம் பல்வேறு கோணங்களில் பார்த்திருக்கிறார்கள் என்பதை, தனக்கே உரிய பாணியில் ''தனிப்பாடல் காட்டும் திருமால் பெருமை'' எனும் தலைப்பில் தந்துள்ளார் பேராசிரியர் திரு தி. இராசகோபாலன் அவர்கள்.

குலத்தின் அடிப்படையில் எவரும் உயர்ந்தவராக முடியாது, அவர் கொண்ட குணத்தினால்தான் உயர்ந்தவராக முடியம் என '' அந்தணர் என்போர் யார்'' என்பதற்கான அடையாளங்காட்டி, திரு மு. அருணகிரி அவர்கள் தொகுத்தளித்துள்ளார்.

கந்தர் அனுபூதி விளக்கத்தினைத் தொடராக வழங்கி வரும் டாக்டர் சரசுவதி இராமநாதன் அவர்களின் தொடர் கட்டுரையும், திருமந்திர உபதேசத் தொடர் வழங்கி வரும் திருமந்திரச் செல்வர் திரு டி.வி. வெங்கட்ராமன் அவர்களின் தொடரும் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

திருமுறைகளின் சிறப்புகளை கயிலைச் செல்வர் சிவத்திரு ப.மூக்கப்பிள்ளை அவர்களும், தென்திசைக் கடவுளான தட்சிணாமூர்த்திக்கும் கலைமகளான சரஸ்வதிக்கும் உள்ள பல சிறந்த குணாம்சங்களை ஒப்புநோக்கி திரு ஜி.ஆர்.சுப்பிரமணியன் அவர்களும், பெரும் செல்வம் நெருப்பாக மாறாமல் நம்மைக் காத்துக் கொள்ள வேண்டுமென ஆழ்வார்களின் பாசுரங்களோடு திரு. டி.எஸ்.இராமசாமி அவர்களும், கருத்துப் பெட்டகங்களை வழங்கியுள்ளனர்.

கோயம்பேடு அருள்மிகு குறுங்காலீஸ்வரர், தாடிக்கொம்பு அருள்மிகு சௌந்தரராசப் பெருமாள் ஆகிய திருக்கோயில்களின் சிறப்புக்கள் திருத்தல உலாவாக இவ்விதழில் வழங்கப்பட்டுள்ளன.

இதழினைப் படித்து இன்புறுவோமாக!

அன்புள்ள

(த. பிச்சாண்டி, இ.ஆ.ப.)
சிறப்பு ஆணையாளர்
மற்றும் ஆணையாளர்

இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,
119, உத்தமர் காந்தி சாலை,
சென்னை - 600 034.

# குணமென்னும் குன்றேறி நின்றார் கோபம் கணநேரங்கூடத் தங்காமல் மறைந்துவிடும்



## மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள்

நற்குணங்கள் அனைத்தும் கொண்ட பொற்குன்றமாகத் திகழ்பவர்தான் முதியவர் முகிலன்! அவர் அறிவுரைகேட்டு நடந்திட அந்த ஊரே அவர் இல்லத்தின் முன் நிற்கும். அவருக்கு வாய்த்த துணைவியும் அந்த ஊருக்கே மூதாட்டியாக விளங்குகிற நல்லம்மை! ஊரில் எந்த வீட்டில் நடக்கும் இன்ப நிகழ்ச்சி, துன்ப நிகழ்ச்சியாயினும் முகிலனும் நல்லம்மையும் அங்கு முன்னிலை வகிக்காமல் இருக்க மாட்டார்கள். அந்த நல்லார் இருவருக்கும் பிறந்த செல்வனோ, தாய்தந்தையர் பெருமையைக் குலைத்திடும் தீயோனாகத் திரிந்திடுகின்றான் என்ற பொல்லாத நிலை! பெற்றோர் சூட்டிய நல்லான் என்ற பெயரை அவனே மாற்றிவிட்டு வல்லான் என வைத்துக் கொண்டான். முகிலனும் நல்லம்மையும் தங்களுக்கு வாய்த்த பிள்ளையைத் திருத்திட பெரும் பாடுபட்டு, முடியாத காரணத்தால் அவன்மனம்போல் விட்டுவிட்டனர்.

வல்லானின் வன்முறைச் செயல்கள், ஒழுக்கக்கேடுகள், அந்த ஊரார் அறிந்ததாயினும் அவற்றைப் பெரிதுபடுத்தாது அவன் தந்தையார் முகிலனிடம் தனித்ததோர் மரியாதை காட்டி வந்தனர்.

ஒருநாள் தோட்டத்தில் பணிபுரிந்து கொண்டிருந்த முகிலனை, பக்கத்து வீட்டுக் காளைமாடு பாய்ந்துவந்து முட்டித் தள்ளியது! விலாப்புறம் குருதி கொட்டியது முகிலனுக்கு! தெருவில் உள்ளோர் அந்த மாட்டைத் தாக்கிடத் தொடங்கினர். அதைத் தடுத்து நிறுத்தி- ''வாயற்ற உயிர்! அதையேன் வதைக்கிறீர்கள்?'' எனக் கேட்டுத் தனது குண நிறைவைக் காட்டிக் கொண்டவர்தான் அந்தப் பெரியவர்!

இன்னொரு முறை, குறும்புக்காரச் சிறுவர்கள் சிலர் கூடிக்கொண்டு அவர் மீது சேற்றை வாரி வீசிவிட்டனர். அந்தச் சிறுவர்களின் பெற்றோர், செய்தி கேள்வியுற்று அவர்களைத் தங்கள் வீட்டுத் தூண்களில் கட்டிப்போட்டனர். தகவல் அறிந்ததும் அந்தத் தங்கக் குணநலனார், விரைந்தோடிச் சென்று ''அறியாக் குழந்தைகள் விளையாடினர்! அதற்காக இப்படியொரு தண்டனையா? வேண்டாம்! வேண்டாம்!'' எனக் கூறி, சிறுவர்களை அவிழ்த்துவிட்டு அவர்தம் உச்சியிலே முத்தமீந்து, தன்னால் அவர்களுக்குற்ற தொல்லைக்காக வருத்தம் தெரிவித்துக்கொண்டார்.

ஊருக்குப் பெரிய மனிதர்! இவர் மகன் மட்டும் ஊதாரியாகத் திரிகிறானே! இவ்வாறு, அவர்பால் அழுக்காறு கொண்ட இரண்டொருவர் ஊர்ப்பொது மண்டபங்களில் பேசியது அவர் செவிகளில் விழுந்தபோதுகூட, தனது நிலையை நொந்து கொண்டாரே தவிர பேசியவர்கள் மீது கோபங்கொள்ளவில்லை அந்தக் குணக்குன்று!

ஒரு நாள் இடியென செய்தி வந்தது! முகிலனின் முரட்டு மகன் அந்த ஊர்க்கோயில் சிலையொன்றைத் திருடிக் காவலரிடம் சிக்கிக் கொண்டான் என்று!

சினத்தால் முகம் சிவந்தறியாத முகிலனின் முகம் செந்தணல்கூடமாயிற்று! ''சிலை திருடியவனைக் கொலை செய்துவிட்டுத் திரும்புகிறேன்'' என்று புலிக்குரல் கொடுத்துவிட்டுப் புறப்பட்டார் கையில் கொடுவாளுடன்!

தெருவில் உள்ளோர், ''என்னம்மா! பெற்ற மகனைக் கொன்று குவிக்கப் போகிறார்! தடுக்காமல் நிற்கிறீர்களே?'' என்று நல்லம்மையைச் சூழ்ந்துகொண்டு கேட்டனர்.

''சாது மிரண்டால் காடு கொள்ளாது என்பார்களே, அதுபோல இன்று நடக்கப் போகிறதே - மகனையும் இழந்து, மணவாளனையும் மரணமேடைக்கு அனுப்பப் போகிறீர்களே''- என்று அனைவரும் துடித்தனர்.

நல்லம்மை அமைதியாக அவர்களுக்குப் பதில் அளித்தாள்.

''என் கணவர் குணமென்னும் குன்றேறி நிற்பவர்! அவருக்கு ஏற்பட்டுள்ள கோபத்தை அவரால் நீண்ட நேரம் நெஞ்சில் வைத்துக்கொள்ள முடியாது! கணநேரம்கூட அந்தக் கோபம் தங்காது! கோபம் குறைந்து மறைந்து இப்போதே திரும்பி விடுவார் பாருங்கள்!''

நல்லம்மையின் இந்தப் பதிலைக் கேட்டு, ஒருவர் சொன்னார்,

''அம்மா! குணக் குன்றுகளான பெரியவர்களின் கோபத்தை, கோபிக்கப்பட்டவர்களால் கணநேரம் கூட தாங்கிக் கொள்ள முடியாது என்பார்களே அப்படித் தானே குறள் கூடக் கூறுகிறது.!''

இப்படிக் கேட்டவருக்கு நல்லம்மை சொன்ன பதில் பின்வருமாறு:

''அப்படியல்ல! பெரியவர்களுக்குரிய குண நலன்களில் ஒன்று; அவர்களுக்கு ஏற்பட்டுவிடுகிற கோபம் - கணநேரங்கூடத் தங்காமல் மறைந்துவிடும் என்பது தான்! அதோ பாருங்கள் கொண்ட கோபத்தைக் காத்திட முடியாமல் என் கணவர் திரும்பி வருகிறார்.''

முகிலன் திரும்பி வந்துவிட்டார்! ''காவலன் கையில் சிக்கிவிட்டான்! நீதிமன்றம் அவனுக்குத் தரவேண்டிய தண்டனையைத் தரட்டுமென்று... நான் திரும்பிவிட்டேன்''

எனக் கூறியவாறு கையிலிருந்த கொடுவாளைக் கீழே வீசி எறிந்தார் முகிலன்.

ஊரார், பெருமூச்சுடன் நிம்மதியாகக் கலைந்து சென்றனர்.

**''குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது''**

-மாண்புமிகு தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களின் குறளோவியமாம் தமிழ்க் காவியத்திலிருந்து இக்கருத்தோவியம் நன்றியுடன் எடுத்து வெளியிடப்படுகிறது.

## இதழின் உள்ளே ....

# அருள்மிகு முருகவேள் 108 போற்றிகள்



1. ஓம் ஆறுமுகச்சிவமே போற்றி.
2. ஓம் அறுகுசூடிதன் இளையாய் போற்றி.
3. ஓம் அழகினுக் கழகே போற்றி.
4. ஓம் அருளினுக் கருளே போற்றி.
5. ஓம் அலங்கார நாயக போற்றி.
6. ஓம் அநுபூதி நாதனே போற்றி.
7. ஓம் அன்பின் அண்ணா போற்றி.
8. ஓம் ஆறுமுக அப்பா போற்றி.
9. ஓம் இமையோர் இறைவா போற்றி.
10. ஓம் இமயப் புகழோய் போற்றி.
11. ஓம் இருளினை நீக்குவாய் போற்றி.
12. ஓம் இருசுடர் ஆனாய் போற்றி.
13. ஓம் ஈசனார் குருவே போற்றி.
14. ஓம் ஈரேழ் உலகோய் போற்றி
15. ஓம் உமையருட் செல்வா போற்றி.
16. ஓம் உயர்மறைப் பொருளே போற்றி.
17. ஓம் எஃக வேலுடையாய் போற்றி
18. ஓம் எமபயம் நீக்குவாய் போற்றி.
19. ஓம் எழில் அற்புதனே போற்றி.
20. ஓம் ஏறுமயில் ஏறி போற்றி.
21. ஓம் ஒப்பிலா இறைவா போற்றி.
22. ஓம் ஓங்காரப் பொருளே போற்றி.
23. ஓம் ஔவைக் கரசே போற்றி.
24. ஓம் கங்கையின் மைந்தா போற்றி.
25. ஓம் கடம்பா இடும்பா போற்றி.
26. ஓம் கதிர்காமக் கந்தா போற்றி.
27. ஓம் கந்தா முருகா போற்றி.
28. ஓம் கவிமாலை அணிந்தாய் போற்றி.
29. ஓம் கார்த்தி கேயனே போற்றி.
30. ஓம் காவற் காரனே போற்றி.
31. ஓம் காவடி விருப்பனே போற்றி
32. ஓம் குகனென நின்றாய் போற்றி
33. ஓம் குமரகிரி வாசனே போற்றி
34. ஓம் கும்பமுனிக் குருவே போற்றி
35. ஓம் குராவடி வேலனே போற்றி
36. ஓம் குறத்திக் கோவே போற்றி
37. ஓம் குறிஞ்சிக் கிழவா போற்றி
38. ஓம் குன்றம் எறிந்தோய் போற்றி
39. ஓம் குன்றுதோ றாடுவாய் போற்றி
40. ஓம் கூத்தன் மைந்தா போற்றி
41. ஓம் கூத்தாடு மயிலோய் போற்றி
42. ஓம் கொற்றவை குமரா போற்றி
43. ஓம் கொற்றதனி வேலோய் போற்றி
44. ஓம் கோலமயில் குமரா போற்றி
45. ஓம் கோரும்வரம் தருவாய் போற்றி
46. ஓம் சங்கப் புலவா போற்றி
47. ஓம் சரவண பவனே போற்றி
48. ஓம் சகல நலம் அருள்வாய் போற்றி.
49. ஓம் சண்முகக் குமரா போற்றி.
50. ஓம் சிவகுரு நாதா போற்றி
51. ஓம் சிவசுப்பிரமணியா போற்றி
52. ஓம் சீரலைவாய்த் தேவே போற்றி.
53. ஓம் சூர் முதல் தடிந்தாய் போற்றி.
54. ஓம் செஞ்சுடர் வேலா போற்றி
55. ஓம் செவ்வேள் பரமா போற்றி
56. ஓம் செந்தில் வாழ்வே போற்றி
57. ஓம் செந்தமிழ்ச் செல்வா போற்றி.
58. ஓம் செங்கோட்டு வெற்பா போற்றி.
59. ஓம் சேவற் கொடியோய் போற்றி.
60. ஓம் சேந்தா முருகா போற்றி
61. ஓம் சைவக் கொழுந்தே போற்றி
62. ஓம் ஞானச்சுடரே போற்றி
63. ஓம் ஞானப் பழமே போற்றி.
64. ஓம் தங்க வேலனே போற்றி.
65. ஓம் தண்டாயுதபாணியே போற்றி.
66. ஓம் தமிழ்மா மறையே போற்றி
67. ஓம் தமிழெனும் அழகே போற்றி.
68. ஓம் திகழ்மணி மார்பா போற்றி
69. ஓம் திகழ்மயில் வாகனா போற்றி.
70. ஓம் திருச்செந்தூரா போற்றி.
71. ஓம் திருப்பரங் குன்றா போற்றி.
72. ஓம் திருஆவி னன்குடியாய் போற்றி.
73. ஓம் திருவே ரகக்குருவே போற்றி.
74. ஓம் திருத்தணிகைத் தமிழே போற்றி.
75. ஓம் திருப்புகழ் விருப்பா போற்றி
76. ஓம் திருமால் மருகா போற்றி.
77. ஓம் திருவருட் செல்வா போற்றி.
78. ஓம் தீமையைத் தீர்ப்பாய் போற்றி.
79. ஓம் துங்கக் கொடையோய் போற்றி.
80. ஓம் தூ மறைக்கு ஆதி போற்றி.
81. ஓம் தெய்வானை கணவா போற்றி.
82. ஓம் தேவர்தம் கோவே போற்றி
83. ஓம் நக்கீர நாயகா போற்றி
84. ஓம் நற்றமிழ் வேந்தே போற்றி.
85. ஓம் பழநிமலை வாழ்வே போற்றி
86. ஓம் பழமுதிர்ச் சோலையாய் போற்றி
87. ஓம் பன்னிரு தோளாய் போற்றி.
88. ஓம் பதினெண்கண் மலர்ந்தாய் போற்றி.
89. ஓம் பிணிமுகம் ஏறுவாய் போற்றி.
90. ஓம் பிணிக்குலம் ஓட்டுவாய் போற்றி.
91. ஓம் பிரணவம் மொழிந்தாய் போற்றி.
92. ஓம் பிரமனைக் குட்டினாய் போற்றி.
93. ஓம் பிறவா நெறி அருள்வாய் போற்றி.
94. ஓம் மலைமகள் மகனே போற்றி.
95. ஓம் மன்றாடி மைந்தா போற்றி.
96. ஓம் மாயோன் மருகா போற்றி.
97. ஓம் முத்தமிழ் முருகா போற்றி.
98. ஓம் முத்தைய வேளே போற்றி.
99. ஓம் முருகெனும் அழகே போற்றி.
100. ஓம் முருகாற்றுப் படையோய் போற்றி.
101. ஓம் மூவர்க்கும் முதல்வா போற்றி.
102. ஓம் வள்ளி நாயகனே போற்றி.
103. ஓம் வழித்துணைக் கழகா போற்றி.
104. ஓம் விழித்துணை அழகா போற்றி.
105. ஓம் வெற்றிவேல் முருகா போற்றி
106. ஓம் வேடர்தம் மருகா போற்றி.
107. ஓம் வையச் சுடரே போற்றி.
108. ஓம் வைர வேல் வீரா போற்றி

போற்றி ஓம்!



# இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை

நுங்கம்பாக்கம், சென்னை - 600 034.

## அனைத்து சாதியினரும் அர்ச்சகர் ஆகும் பயிற்சிக்கான ஓராண்டு சான்றிதழ் படிப்பு மாணவர்கள் சேர்க்கைக்கான அறிவிக்கை விளம்பரம்

தமிழகத்திலுள்ள இந்து சமயத் திருக்கோயில்களில், உரிய பயிற்சியும், தகுதிகளும் உள்ள இந்துக்களில் அனைத்து சாதியினரும், சாதி வேறுபாடின்றி அர்ச்சகராக நியமனம் பெறுவதற்கு தமிழக அரசு பிறப்பித்துள்ள அரசாணையின்படி, ஓராண்டு சான்றிதழ் பயிற்சி அளித்திட பின்வரும் இடங்களில் தொடங்கப்பட உள்ள பயிற்சி நிலையங்களில் பயிற்சிக்குச் சேர விரும்புபவர்கள் பின்வரும் படிவத்தில் உரிய விவரங்களை முழுமையாக அளித்து உரிய சான்றிதழ்களின் நகல்களுடன் விண்ணப்பிக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

பயிற்சி நிலையங்கள்

**சைவம்**

1. மதுரை - அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில், மதுரை
2. பழநி - அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழநி
3. திருச்செந்தூர் - அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில், திருச்செந்தூர்
4. திருவண்ணாமலை - அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில், திருவண்ணாமலை

**வைணவம்**

1. சென்னை - அருள்மிகு பார்த்தசாரதி சுவாமி திருக்கோயில், திருவல்லிக்கேணி
2. திருச்சி - அருள்மிகு அரங்கநாதசுவாமி திருக்கோயில், ஸ்ரீரெங்கம்

பயிற்சி நிலையத்தில் சேர்த்துக் கொள்வதற்கான தகுதிகள்:

1. விண்ணப்பதாரர்கள் இந்துக்களாக இருக்கவேண்டும்.
2. குறைந்தபட்சம் எட்டாம் வகுப்பு தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும்.
3. 01.01,2007 அன்று பதினான்கு வயது நிரம்பியவராகவும், இருபத்தி நான்கு வயதிற்குட்பட்டவராகவும் இருத்தல் வேண்டும்.
4. சைவ பயிற்சி நிலையத்தில் பயில விரும்புகிறவர்கள் இந்து சைவ சமய கோட்பாடுகளைக் கடைபிடிப்பவர்களாகவும், வைணவ பயிற்சி நிலையத்தில் பயில விரும்புகிறவர்கள் வைணவ சமய கோட்பாடுகளைக் கடைப்பிடிப்பவர்களாகவும் இருத்தல் வேண்டும்.

குறிப்பு :

1. பயிற்சி பெறும் மாணவர் பயிற்சி நிலைய வளாகத்திலேயே தங்கி பயில வேண்டும்.
2. பயிற்சிக்குத் தேர்வு செய்யப்படும் மாணவர்களுக்கு இலவசமாக உணவு, சீருடை, உறைவிடம், பயிற்சிக் காலத்தில் உதவித்தொகை ஆகியன வழங்கப்படும்.
3. மாணவர்களின் தேர்வும், எண்ணிக்கையும் தேர்வுக் குழுவின் முடிவிற்குட்பட்டது.
4. விண்ணப்பப்படிவத்தில்அதற்கெனஒதுக்கப்பட்டுள்ளஇடத்தில்ஒருபுகைப்படம்ஒட்ட வேண்டும்.
5. விண்ணப்பதாரர் சேர விரும்பும் பயிற்சி நிலையத்தினை விண்ணப்ப படிவத்தில் தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.
6. மாணவர் சேர்க்கையில் வகுப்புவாரி ஒதுக்கீடு முறை பின்பற்றப்படும்.

**விண்ணப்பங்கள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் 21.3.2007 அன்று மாலை 5.45 மணி வரை**

விண்ணப்பம் அனுப்பப்பட வேண்டிய முகவரி

**ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை**

**119, உத்தமர் காந்தி சாலை, நுங்கம்பாக்கம், சென்னை - 600 034.**

**அர்ச்சகர் பயிற்சிக்கான ஓராண்டு சான்றிதழ் படிப்பு - விண்ணப்பப் படிவம்**

1. விண்ணப்பதாரர் பெயர் :
2. தந்தை / காப்பாளர் பெயர் :
3. பிறந்த தேதி, வயது :
4. நிலையான முகவரி :
5. தற்போதைய முகவரி :
6. மதம் : இந்து - சைவம் - வைணவம்
7. சாதி :
8. கல்வித் தகுதி :
9. முன் அனுபவம் :
10. பயிற்சி பெற விரும்பும் பயிற்சி நிலையம் :
11. விரும்பும் பிரிவு : 1. சைவம்
    2. வைணவம் (அ) பாஞ்சராத்ரம்
    (ஆ) வைகானசம்

புகைப்படம் ஒட்டி கையொப்பமிட்டு சான்றளிக்கப்பட வேண்டும்

மேற்கண்ட விவரங்கள் அனைத்தும் உண்மையானவை என சான்றளிக்கிறேன்

இடம் :

நாள் :

விண்ணப்பதாரரின் கையெப்பம்



# "திங்கள் தோறும் திருமயிலை"

தமிழாகரர் தெ. முருகசாமி
புதுச்சேரி - 9

சான்றோர் உடைத்தான தொண்டை நாட்டுத் தலங்களுள் மயிலாப்பூரும் ஒன்று. அன்னை கற்பகாம்பாள் மயில்வடிவு தாங்கி இறைவனைப் பூசித்துப் பேறு பெற்ற தலமாதலின் இத்திருத்தலம் மயிலாப்பூர் எனப்பட்டது. தேவாரம் பாடிய மூவருள் திருஞான சம்பந்தரால் மட்டும் பாடப்பெற்ற தலம் இது. அப்பரடிகள் இத்திருத்தலத்தை வணங்கிப் பாடல் பாடியதாகச் சேக்கிழார் கூறியுள்ளார். ஆனால் அப்பதிகம் கிடைக்கவில்லை. பல்வேறு திருத்தலங்களைப் போற்றிப் பரவிய ஐயடிகள் காடவர்கோன் என்னும் சிவனடியார் இத்திருத்தலத்தைக் கீழ்க்கண்டவாறு போற்றுகிறார்.

''குயிலொத் திருள்குஞ்சி கொக்கொத் திருமல்
பயிலப் புகாமுன்னம் நெஞ்சே! - மயிலைத்
திருப்புன்னை யங்கானல் சிந்தியா யாகில்
இருப்பின்னை அங்காந் திளைத்து.''

நெஞ்சைநோக்கிக் கூறுவதாக அமைந்த இப்பாடல், குயில் போன்றக் கருநிறக் கூந்தல் கொக்குபோன்ற வெண்ணிறமாய் மாறும் வயோதிகத்தால் இருமல் முதலிய நோய்க்கு ஆளாகாத இளமைக் காலத்திலேயே புன்னையம் கானலான மயிலாப்பூரைச் சிந்தித்து வழிபட்டு வந்தால் இறைவனது திருப்பாதத்தில் தங்கி இளைப்பாறலாம் என்று அறிவுறுத்துகிறது. இத்தகு சிறப்பு வாய்ந்த மயிலாப்பூரில் அறுபத்து மூன்று நாயன்மாரில் ஒருவரான வாயிலார் அவதாரம் செய்தவராவார். அய்யன் திருள்ளுவர் இங்கு பிறந்ததாகக்கூறுவதும் உண்டு.



இம்மயிலையில் திருஞானசம்பந்தர் இறையருளால் செயற்கரிய செயல் ஒன்றைச் செய்து காட்டினார். இங்கு வாழ்ந்த சிவநேசசெட்டியார் என்பவர். திருஞான சம்பந்தரின் அற்புதங்களைக் கேட்டறிந்த அளவில் அவரிடம் மிகுந்த அன்பு பூண்டிருந்தார். எல்லையற்ற அவ் அன்பின் காரணமாகத் தம் மகள் பூம்பாவையைச் சம்பந்தருக்குத் திருமணம் முடிக்க விரும்பினார். ஆனால் பூம்பாவை அரவந்தீண்டி இறந்துபடவே இறந்த மகளின் எலும்பைக் குடத்துள் இட்டு வைத்துக் காத்திருந்தார். திருத்தலப் பயணமாக மயிலாப்பூருக்கு வந்த சம்பந்தரிடம் தாம் பாதுகாத்து வந்த அந்த எலும்புக் குடத்தைக் காணிக்கையாக வைத்து வணங்கினார்.

பூம்பாவையாம் மகளைத் தமக்கு ஆட்படுத்த நினைத்த சிவநேசரின் உன்னதத்தையும் தமக்கே ஆட்பட விரும்பியிருந்த பூம்பாவையின் உணர்வையும் எண்ணிப் பார்த்த சம்பந்தர் மனங்கலங்கி அப்பெண் அரவந்தீண்டி இறந்ததற்காக அல்லாமல் திங்கள் தோறும் திருமயிலையில் நடக்கும் திருவிழாக்களைக் கண்டு களித்து வந்த நிலையில் தற்போது அவற்றைக் காண முடியாதபடி இறந்து பட்டதற்காக வருந்தி

அவற்றைக் காண வருமாறு அழைப்பது போன்ற வகையில் பூம்பாவையின் பக்தி விசேடத்தைக் கூறும் முகமாகப் பாடல்களைப் பாடி எலும்பைப் பெண்ணுருவக்கினார்.



இறையருளால் அவர் அங்ஙனம் செய்தாராயினும் பாடிய பாடல்கள் யாவும் அப்பூம்பாவை பொருட்டே பாடப்பட்டதாகத் தெரிகிறது. பூம்பாவாய் எனப்பாடல்தோறும் விளித்துப் பாடியதோடன்றி, ''தேனமர் பூம்பாவைப் பாட்டாக ஞான சம்பந்தன் புகழ்ந்த பத்தும்'' என இறுதிப்பாடல் பாடப்பட்டுள்ளதால் பூம்பாவையின் பக்திக்கு மயிலாப்பூரின் விழாப் பொலிவு காரணமாயிருந்தது எனத் தெளியலாம்.

மட்டிட்ட புன்னை எனத் தொடங்கும் பதிகத்தின் பத்துப்பாடல்களும் மயிலாப்பூரில் ஒவ்வொரு மாதத்திலும் நடக்கும் திருவிழாபற்றிய சிறப்பைக் கூறுகின்றன. மட்டிட்ட புன்னை என்ற முதல் பாடலைத் தவிர்த்த ஏனைய இரண்டு முதல் ஏழாம் பாடல் வரையான ஆறுபாடல்கள் முறையே ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பங்குனி மாதங்களை வெளிப்படையாகக் குறிக்கின்றன. எட்டு, ஒன்பது, பத்து ஆகிய மூன்று பாடல்கள் சித்திரை, வைகாசி, ஆனி, என்ற மாதங்களைக் குறிப்பாகக் குறிக்கின்றன. இங்ஙனம் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் பதிகத்தின் இரண்டு முதல் பத்து வரையான பாடல்கள் ஒன்பது மாதங்களின் விழாப்பொலிவுகளை உணர்த்தினாலும் எஞ்சிய ஆடி, ஆவணி, புரட்டாசி, என்ற மூன்று மாதப் பொலிவை மட்டிட்ட புன்னை என்ற முதற்பாடல் குறிப்பிடுவதாகஆன்றோர்கூறுவர்.

முதற்பாடலில் அடக்கிக்கூறப்பட்ட ஆடி, ஆவணி, புரட்டாசி என்ற மூன்று மாதங்களில் இறைவனுக்குப் பவித்திரம் சாத்துதல் என்ற நிகழ்ச்சி நடைபெறும். திருக்கோயில் வழிபாட்டில் தருப்பைப் புல்லுக்கு முக்கிய இடம் உண்டு. அப்புல்லின் பயன்பாடு இம்மூன்று திங்களிலும் மிகுதியாகக் காணப்படும், முதுவேனில் பருவத்தின் உச்சத்தை ஆடிமாதம் உணர்த்தும், அப்பருவத்தின் வெப்ப உச்சத்தைத் தணிக்கும் பொருட்டு தருப்பைப் புல்லால் குளிரூட்டுதல் என்ற விசேடம் விழாவாக கொண்டாடப்படும். இது ஆடி மாதத்தில் வளர்பிறை சதுர்த்தசி நாளில் நடைபெறும். முதுவேனில் குறைந்து கார்காலம் தொடங்கிய ஆவணி, புரட்டாசியில் வளர்பிறை பின் நான்கு நாளிலும் தேய்பிறை முன் நான்கு நாளிலும் தருப்பைப்புல் சாத்துதலான பவித்திரம் சாத்துதல் நடைபெறும், இப்பவித்திரம் சாத்தும் மூன்று திங்களிலும் அடியார்களுக்கு அன்னதானம் இடுதலான நிகழ்ச்சி வெகுசிறப்பாக நடைபெறும். இதைத்தான் சம்பந்தர் முதல் பாடலில் **'கபாலீச்சரம் அமர்ந்தான், ஒட்டிட்ட பண்பின் உருத்திரப் பல்கணத்தார்க்கு, அட்டிட்டல் காணாதே போதியோ''** எனப் பூம்பாவையை விளித்துக்கூறுவதாகப் பாடியுள்ளார்.

இப்படியாகப் பதிகத்தின் முதற்பாடல் அன்னதானச் சிறப்பைக் கூற, ஏனைய பாடல்கள் திருவிழாப் பொலிவைக் கூறுவதால் மயிலாப்பூரானது அன்னதானத்தாலும் திருவிழாவாலும் பொலிவுபெற்ற திருத்தலம் என்பது ஞானசம்பந்தரின் கணிப்பு எனத் தெரிகிறது. இதைச் சேக்கிழார் உணர்ந்து உணர்த்துவார் போலவே சம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய நிகழ்ச்சியைக் கீழ்க்கண்ட பாடலால் உறுதிப்படுத்தினார்.

***''மண்ணில் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்***
***அண்ணார் அடியார்தமை அமுதுசெய்வித்தல்***
***கண்ணினால் அவர்நல் விழாப் பொலிவுகண் டார்தல்***
***உண்மையாம் எனில் உலகவர் முன்வருகவென உரைப்பார்''***

பதிகத்தின் இரண்டாம் பாடல், பூசிக் கொண்டால் கைம்மேல் பலன்தரும் திருநீற்றை மேனியெல்லாம் பூசிக்கொள்ளும் சிவபெருமான் தங்கியுள்ள மயிலாப்பூரின் திருவோண விழாச் சிறப்பைக் கூறுகிறது. **''கைப்பயந்த நீற்றான் கபாலீச்சரம் அமர்ந்தான். ஐப்பசி ஓணவிழா காணாதே போதியோ''** என்ற பாடல் வரியால் திருமாலுக்கு உகந்த திருவோண விழா பற்றிய சிறப்பு தெரிகிறது. இவ்விழாவைத் திருமாலே தொடங்கி வைத்ததாகக் கூறுவதுண்டு.

மூன்றாம் பாடல் தையலார் கொண்டாடும் விளக்கீடு காணாதே போதியோ எனக் கார்த்திகை தீபவிழாவைக் குறிக்கிறது. ஐம்பூதத்தில் இறைவன் நெருப்பு வடிவானவன் என்பதை இத்தீபவிழா நினைவூட்டுகிறது. இது பழங்காலந் தொட்டு கொண்டாடப்படும் விழா என்பதால் ஞானசம்பந்தர் ''தொல்கார்த்திகை நாள்'' என்று இதைச் சிறப்பிக்கின்றார்.

நான்காம் பாடல் மார்கழித் திருவாதிரை தரிசனக் காட்சி விழாவைக் குறிக்கிறது. திருமாலுக்குத் திருவோணம் போலச் சிவனுக்குத் திருவாதிரை சிறப்புக்குரியதாகும். பதஞ்சலி, வியாக்கிரபாத முனிவர்களுக்குச் சிவபெருமான் நடனம் ஆடிக்காட்டிய நாள்தான் திருவாதிரை. இறைவன் ஐம்பூதத்தில் ஆகாய மயமானவன் என்பதை இவ்விழா உணர்த்துகிறது.

ஐந்தாம் பாடல் **''நெய்பூசும் ஒண்புழுக்கல் நேரிழையார் கொண்டாடும் தைப்பூசம் காணாதே போதியோ''** என நெய்ப் பொங்கல் செய்து கொண்டாடும் தைத்திங்களின் பூசத் திருவிழாவைக் குறிக்கிறது. கார்த்திகை போலத் தைப்பூசமும் ஒளிமயமான விழாவாகும். ஒரு விளக்கு பல விளக்குகளை ஏற்றும் என்ற தத்துவத்தின்படி சிவபெருமானே முருகனாக ஒளிபெற்ற நாள் என்றதால் இவ்விழா முருகனுக்குரிய விழாவாகவும் கொண்டாடப்படுகிறது.

ஆறாம் பாடல் **'மாசிக் கடலாட்டுக் காணாதே போதியோ'** என மாசி மாதத்தில் மக நட்சத்திரம் சேரும் பௌர்ணமி நாளில் நடக்கும் கடல் தீர்த்த விழாவைக் குறிக்கிறது. இறைவன் ஐம்பூதத்தில் நீர் வடிவினன் என்ற கருத்தை இவ்விழா உறுதிப்படுத்துகிறது.

ஏழாம் பாடல் பங்குனி உத்திரப் பெருவிழாவைக் குறிக்கிறது. இப்பங்குனியில் தான் பார்வதி திருமணம் நடந்ததாகக் கூறுவது உண்டு. இவ்விழாவின் பொருட்டு அடியார் களுக்கு அன்னதானம் செய்யும் வழக்கமும் உண்டு. இதைத்தான் **'பலிவிழா பங்குனி உத்திரநாள் ஒலிவிழா'** என்கிறார் ஞானசம்பந்தர். உண்மையான சிவனடியார்களுக்கு உணவளிப்பதை உருத்திரபலி என்பர். அடியார்க்கிடும் உணவுப் பலி மிகுதியாக இருப்பதால் எங்கும் ஆரவாரமாக இருக்கும் என்பதால் அதை ஒலிவிழா என்றார் சம்பந்தர். இங்ஙனம் அடியார்கள் கூடும் பங்குனியுத்திரச் சிறப்பானது. வீதிகள் தோறும் மலிந்து, பெண்களால் அன்னதானம் செய்யும் செழுமை மிக்க விழாவாக இருக்கும் என்பதால் ஞானசம்பந்தர் இதை **'மலிவிழா வீதி மட நல்லார் மாமயிலைக் கலிவிழா'** என்று பாராட்டுகிறார். அன்று நடந்த அடியார்க் கூட்டச் சிறப்பானது இன்று மயிலாப்பூரில் அறுபத்து மூவர் விழாவாகப் பொலிவுறுவதை அறிவர் என்பதால் சம்பந்தர் கூறும் மயிலாப்பூரின் தெய்வாம்ச விழாச் சிறப்பை என்னென்பது.

எட்டாம் பாடல் சித்திரையில் பதினெட்டு கணத்தவர்களும் ஒன்று கூடிக் கொண்டாடும் அட்டமி நாள்விழாவைக் குறிக்கிறது. இந்த அட்டமியை மகாஅட்டமி என்பர். இந்த விழா இக்காலத்தில் மார்கழி தேய்பிறை அட்டமியாகத் தென்தமிழ் நாட்டில் மதுரை போன்ற சிவாலயங்களின் நடைபெறுகின்றது.

ஒன்பதாம் பாடல் **'பொற்றாப்பு காணாதே போதியோ'** என்று இளவேனில் காலமான வைகாசி மாத வசந்தோற்சவம் எனப்படும் ஊஞ்சல் என்பதைப் (பொன்+தாம்பு) பொற்றாப்பு என்றார் சம்பந்தர். இதைப் பொன்னாலான மாங்கல்யம் கட்டும் திருமணவிழாவாக இறைவனுக்குக் கொண்டாடுவதும் உண்டு.

பத்தாம் பாடல் **'பெருஞ்சாந்தி காணாதே போதியோ'** என்கிறது, முதுவேனிலான ஆனியில் முதுவேனில் வெப்பத்தைத் தணிக்கும் பொருட்டு நடத்தப்படும் நீராட்டு விழாதான் பெருஞ்சாந்தி. இதைப் பௌத்திரோற்சவம் என்பர்.

இப்படியாக ஞானசம்பந்தர் குறிக்கும் திருமயிலையின் பன்னிரண்டு மாதத் திருவிழாப் பொலிவுகள் தமிழ் நாட்டின் எல்லாத் திருத்தலங்களிலும் நடக்கும் பொது விழாக்களேயாயினும் அவைகளை ஒட்டுமொத்தமாக அறியும் வாய்ப்பைப் பூம்பாவையை எழுப்பியதன் மூலம் கற்பகாம்பாள் உறையும் கபாலீச்சரமாம் மயிலாப்பூரைத் தனித்துணர வைக்கிறது எனலாம்.



# ப்ரணய கலஹம் என்கிற மட்டையடி உத்ஸவம்

இந்திரா ஆராவமுதன்
ஸ்ரீரங்கம்

108 வைணவத் தலங்களில் முதன்மையானது ஸ்ரீரங்கம் ஆகும். இங்கு பள்ளி கொண்டிருக்கும் அரங்கனுக்கோ வருடம் 365 நாளும் விழாக்கள்தான் என்பது சொல் வழக்கு. அதன்படி பங்குனி மாதத்தில் நடக்கும் திருவிழாவுக்கு ஆதி ப்ரம்மோத்ஸவம் என்று பெயர்.

இந்த உத்ஸவத்தில் வரும் 8ம் திருநாளில் மட்டையடி உத்ஸவம் என்றும் ப்ரணய கலஹம் என்றும் அழைக்கப்படும் மாபெரும் விழா நடைபெறுவது வழக்கம். இது பெரிய பிராட்டியின் திருநக்ஷத்திரமான உத்திர நக்ஷத்திரத்தில் நடைபெறுவது வழக்கம்.

உலக ரீதிப்படி ஒரு கணவன் மனைவிக்குள் ஊடல் ஏற்பட்டால் கணவன் என்ன செய்வான்? ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய்களைச் சொல்லி மாட்டிக் கொள்வான். பின் சமாதானம் ஆகும்.

இதையேதான் பெருமாளும் பிராட்டியும் நமக்காக நடித்துக் காட்டியிருக்கிறார்கள். அவர்களின் உரையாடல் வெகு சுவாரஸ்யமாக இருக்கும். மேலும் விசிஷ்டாத்வைதத்தை ஸ்தாபித்த மகானான ஸ்ரீராமானுஜர் அருளிய கத்யத்ரயத்தை அன்று இரவில் அவர் பெருமாள், தாயார் முன்னிலையில் அரங்கேற்றம் செய்து அவர்களது ஆசிகளைப் பெற்றார் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

பெருமாள் சார்பாக அரையர் ஸ்வாமியும், தாயாரின் சார்பில் பண்டாரிகளும் உரையாடுவார்கள்.

உத்திரவீதிகள் சித்திரை வீதிகள் எல்லாம் வலம் வந்து பெருமாள் அதிக உத்ஸாகத்துடன் தாயார் சன்னிதிக்கு தங்கப் பல்லக்கில் சுமார் 9 மணி அளவில் எழுந்தருளுவார். அப்போது நடப்பதைப் பார்ப்போம்.

பெருமாள் உறையூரில் உள்ள கமலவள்ளி நாச்சியாரிடம் வந்தசேதியை அறிந்த பிராட்டி அவரை உள்ளே வர அனுமதிக்காமல் சேடிகளை விட்டுக் கதவைச் சாத்தச் சொல்வார்.

மேலும், பூப்பந்துகள், வாழைப்பழம், பலாப்பழம் போன்றவைகளை பல்லக்கின் மீது தாயாரின் சேடிகள் விட்டு எறிவார்கள். கதவை திறப்பது, மூடுவது என்று இவ்வாறு விளையாட்டாக ஒரு அரை மணி நேரம் கழியும். பின்னர் நம்மாழ்வார் சமரசம் செய்தபின், மனம் இரங்கிய தாயார் பெருமாளை உள்ளே வர அனுமதித்து கதவைத் திறக்கச் சொல்லுவார்.

வருடத்தில் இந்த ஒரே ஒரு நாளில்தான் பெருமாளும்,தாயாரும்ஏகசிம்மாசனத்தில்எழுந்தருளி பக்த ஜனங்களுக்கு கண்கொள்ளாக் காட்சியை அருளுவார்கள்.இதைசேர்த்திசேவைஎன்றும்கூறுவர்.

**அரையர் கூறுகிறார் பெருமாளுக்காக:**

உத்ஸவத்தின் பொருட்டு யாம் திருவீதிகள் வலம் வந்தோம். தேவதைகள் புஷ்பமாரி பொழிந்தனர், முன்னும் பின்னும் பிராமணர்கள் ஸ்தோத்திரம் சொல்லியபடி வந்தனர். நாமும் மிகுந்த மனக் களிப்புடன் இங்கே வந்தோம்.



வழக்கம் போல. தேவியாகிய தாங்கள் எதிரே வந்து கைகொடுத்து உள்ளே அழைத்துச் சென்று, சிம்மாசனத்தில் அமரவைத்து, திருவடிகளை அலம்பி, ஆலவட்டம் விசிறி, ஆலத்தி எடுத்து, தாம்பூலம் அளிப்பது ஆகிய உபசாரங்களைச் செய்யாமல், வாசற்கதவைச் சாற்றிக் கொண்டு, முகத்தைத் திருப்பிக் கொண்டு இருப்பதன் காரணம் என்ன? மேலும் உம்முடைய தோழிகள் அனைவரும் பழங்களையும், பூப்பந்துகளையும் எம்மீது விட்டெறிந்து எமக்கு அவமானம் ஏற்படும்படி நடந்ததற்கான காரணம் என்ன?

**பண்டாரி பதில் கூறுகிறார்:**

எப்போதும் வருவது போல் என்று நீர் சொல்வது உண்மையானால் நான் கேட்கும் கேள்விகளுக்கு தாங்கள் பதில் அளிக்க வேண்டும்.

1. தங்களுடைய கண்கள் ஏன் சிவந்து இருந்தன?

2. தலைமுடிகள் ஏன் கலைந்து இருந்தன?

3. கஸ்தூரி, திருமண் காப்பு கரைந்தது ஏன்?

4. உதடுகள் ஏன் வெளுத்துக் காணப்பட்டன?

5. கழுத்தில் நகத்தின் கீறல்கள் காணப்பட்ட ஏன்?

6. பரிவட்டங்கள் ஏன் மஞ்சள் நிறத்தில் இருந்தது?

7. திருமேனி பூரா குங்குமப் பொடிகளின் அடையாளம் ஏன்?

8. கால்களிலும் செம்பஞ்சுக் குழம்பாயிருந்தது ஏன்?

இவைகளைக் கண்ட நாச்சியாருக்கு மனம் வெகுவாகக் கலங்கிப் போய்விட்டது. அதனால், வெளியிருந்து யாரும் உள்ளே வரக்கூடாது என்று உத்திரவு பிறப்பித்தார். நேற்று போன இடத்துக்கே இன்றும் போகச் சொல்லுமாறு நாச்சியார் அருளுகிறார்.

உமது கேள்விக்கான பதிலை யாம் தருகிறோம் என்று ஆரம்பித்து

1. வல்லமை பொருந்திய செங்கோலுடைய அரசனாக இருப்பதால் எனக்கு குடிமக்களைக் காக்க வேண்டிய பொறுப்பு இருக்கிறது. அதனால், கச்சைகட்டி, கத்தி கேடயத்துடன் குதிரையின் மேல் ஏறி நித்திரை இல்லாமல் இரவு பூரா ஊர் முழுவதும் பாரா செய்ததால் கண்கள் சிவந்து காணப்படுகின்றனவே தவிர வேறு ஒன்றும் இல்லை.

2. பலமான காற்று அடித்ததால் திருமுடிகள் கலைந்து விட்டன.

3. கடுமையான சூரிய வெப்பத்தினால் வியர்வையில் திருமண் கலைந்து விட்டது.

4. தேவதைகளை அசுரர்களிடமிருந்து காப்பாற்றுவதற்காக அடிக்கடி சங்கத்தை வாயில் வைத்து ஓசைஎழுப்பியதால் என் அதரங்கள் வெளுத்து காணப்படுகின்றது.

5. காடுகளில் போகும்போது பூமுள்ளு குத்தியதால் கழுத்தில் கீறல்கள் ஏற்பட்டன.

6. திவ்ய பீதாம்பரம் சந்த்யாராகம் போல இருப்பதால் உங்கள் கண்களுக்கு மஞ்சள் வர்ணமாக தோற்றம் அளிக்கிறது.

7. தேவதைகள் எமக்கு அர்ச்சித்த பூக்களின் மகரந்தப் பொடிகள் குங்குமமாக ஒளிர்கின்றன.

8. அடிக்கடி குதிரையின் மீது கால்களை அழுத்தி வைத்து ஏறியதன் விளைவு கால்கள் சிவப்பாகத் தோற்றம் தருகிறது.

இவை போதாது என்று வேட்டையாடி வரும் வழியில் கள்ளர் தலைவனான திருமங்கை ஆழ்வார் என்னை வளைத்துப் பிடித்து எமது ஆபரணங்களையெல்லாம் திருடிக் கொண்டார். அவருக்கு நல்ல உபதேசம் செய்துவிட்டு, நகைகளையெல்லாம் திரும்பப் பெற்றுக் கொண்டு கருவூலத்தில் வைப்பதற்கு முன் எண்ணிப் பார்க்கும்போது ஒரு மோதிரம் காணவில்லை என்பது தெரிய வந்தது. அதற்காக விடியலில் கிளம்பி கணையாழியைக் கண்டெடுத்துக் கொண்டு திருவீதிகளை வலம் வரும் போது தேவதைகள் பாரிஜாத மலர்களைக் கொண்டு சேவிக்க வந்தார்கள். புஷ்பங்களை மட்டும் அவர்களிடமிருந்து பெற்றுக் கொண்டு அவைகளை உமக்காக கொண்டு வந்திருக்கிறேன். இவைகளை ஏற்றுக்கொண்டு எம்மை உள்ளே அழைக்கச் சொல்லும் என்று அறையர்மூலம்தூது விட்டார்.

கணையாழி காணாமல் போனது உண்மையானால், உறையூருக்குப் போய் தன்மனோதரத்தை நிறைவேற்றிக் கொண்ட அனுபவத்தை உடையஅடையாளங்கள் தங்கள் திருமேனியில் இருப்பதால் நேற்று போன அதே இடத்துக்கு இன்றைக்கும்போகச் சொல்லுமாறு தாயார் அருளுகிறார் என்று பண்டாரிகள் பதில் அளித்தார்.

உறையூரா? நாம்அந்த ஊரைக் கண்ணால் பார்த்ததும் கிடையாது, அப்படி ஒருஊர் இருப்பதாககேள்விப்பட்டதும் கிடையாது. நம்மைப் பிடிக்காத துஷ்டர்கள் ஏதாவது கோள் சொல்லி மூட்டினால் அதைஉண்மைஎன்று நம்பி நம்மை அவமானப்படுத்தலாமா? பெண்புத்தி பின்புத்தி என்பது போல் விஜாரிக்காமல் இந்தப் புகாரைத் தரலாமா? நாம்தரும்புஷ்பத்தை வாங்கிக் கொண்டு நம்மை உள்ளேவிடச்சொல்லும் என்றார் பெருமாள்.

முந்தாநாள் அழகிய மணவாளர் வேட்டையாடி வியர்த்துவிறுவிறுத்து வந்ததைஅறிந்தவுடன் நாங்கள் அதிகம் ப்ரீதியுடன் எதிர் கொண்டழைத்து உள்ளே சிம்மாசனத்தில் அமர்த்தினோம். செய்ய வேண்டிய சிச்ருஷைகளைச் செய்தோம். திருமஞ்சனமாட வென்னீர் கொடுத்தோம். பாதி நீராடியும் நீராடாமலும் எழுந்தார். மன்னருக்கு ஏற்ற பீதாம்பரம் கொடுத்தோம்.

அதை எப்போதும் போல சாற்றிக் கொள்ளாமல், ஏதோ ஒரு விதமாக சாற்றிக் கொண்டார்.

திருமண்காப்பையும் திருவேங்கட முடையானின் நாமத்தைப் போல கோணல் மாணலாக சாற்றிக் கொண்டார்.

அப்பம் கலந்த சிற்றுண்டி, அக்காரம் கலந்த பால்தந்ததில்பாதி மட்டுமேசாப்பிட்டுஎழுந்தார்.

சுருளமுது (தாம்பூலம்) அளித்ததையும் எடுத்துக் கொள்ளவில்லை.

ஏதோ ஒரு கவலையில் இருக்கிறார் போலும் என்று நாம் நினைத்து. அவரை நாகணையில் பள்ளி கொள்ள வைத்து விட்டு திருவடிகளை வருடியபடி நாங்கள் இருந்தோம். வஞ்சகரான அவர் எங்களுக்கு மாய நித்திரையை உண்டாக்கி மயக்கமுறச் செய்து விட்டு. அம்மானை, பந்துகழஞ்சி, பீதாம்பரம் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டார். மயக்கம் தெளிந்த நாங்கள் படுக்கையில் அவரைக் காணாததால் வாயில் காப்பாளரிடம் விஜாரித்தோம். அவர்களோ எங்கே போகிறோம் என்று சொல்லாமல் போய்விட்டார்என்றனர்.

நான் உடனே சேடிகளை அழைத்து அவர் சென்ற சுவடுகளைப் பின்பற்றிச் செல்ல கட்டளையிட்டேன். அச்சுவடுகள் உறையூரில் கொண்டு விட்டதாகவும், அங்கே கரும்புத் தோட்டத்தில் சஞ்சரிக்கும் யானையைப் போல தாங்கள் செய்த கோலாகலங்களை விலாவறச் சொன்னார்கள். என் உள்ளம் அனலில் இட்ட மெழுகு போல் உள்ளது. அதனால் நீர் போம். நீர் போம் என்று நாச்சியார் வெகுவாக கோபத்தில் கூறுவதாகப் பண்டாரி கூறினார்.

பெருமாள் உடனே தன் குரலைத் தாழ்த்திக் கொண்டார். ஒருவர்மேல்சந்தேகம்வந்துவிட்டால் அது தீருவதற்குப் பிரமாணம் செய்து தீர்த்துக் கொள்ளலாம்என்பார்கள். அதுபோல

1. நான் தேவதைகளைத் தாண்டித் தருகிறேன்
2. சமுத்திரத்தில் மூழ்குகிறோம்
3. அக்னிப்ரவேசம் வேண்டுமானாலும் செய்கிறேன்
4. பாம்புக் குடத்தில் கையிடுகிறேன்
5. மழு ஏந்துகிறேன்
6. நெய்க் குடத்தில் கையிடுகிறேன்

என்று அடுக்கிக் கொண்டே போய், இவைகளில் எதை வேண்டுமானாலும் செய்கிறேன். எம்மை உள்ளே அழைத்துச் செல்க என்றார்.

1) தேவதைகள் உமது திருவடிகளைக் காண ஆவலாக இருப்பவர்கள். நீரே

அவர்களைத் தாண்டித்தருகிறேன் என்றால் வேண்டாம் என்றா சொல்வார்கள்.

2) ப்ரளயம் ஏற்பட்டபோது சகல உலகத்தையும் வயிற்றில் அடக்கி ஓர் ஆலிலைத் தளிரில் கண் வளர்ந்த உமக்கு சமுத்திரத்தில் மூழ்குவது என்பது பெரிய காரியமா என்ன?

3) ப்ரம்மாவின் யாகத்துக்காக அக்னியில் ஆர்பவித்த உமக்கு அக்னிப்ரவேசம் ஒரு கஷ்டமா?

4) உமது ஆசனமான நாகணையை சென்றால் குடை, இருந்தால் சிங்காசனம், கிடந்தால் படுக்கை என்று சொல்வார்கள். அவ்வாறு இருக்கும்போது பாம்புக் குடத்தில் நீர் கையைவிட்டால் பாம்பு எவ்வாறு உம்மைக் கடிக்கும்?

5) கோடிப்ரகாச சக்கரம் உமது கையில் இருக்கும் போது இரும்பு மழுவை ஏந்துவது ஒரு கஷ்டமாக என்ன?

6) க்ருஷ்ணாவதாரத்தில் ஐந்து லக்ஷம்குடியில் உள்ள வெண்ணையை உண்ட தமக்கு நெய்க் குடத்தில் கையிடுவது பெரிய காரியமா என்ன?

இப்படிப்பட்ட பரிஹாசப் ப்ரமாணங்கள் என்னிடம் செல்லாது அதனால் அங்கேயே செல்லுங்கள் என்றார் தாயார்.

நான் எதைச் சொன்னாலும் அதற்குத் தகுந்த பதிலடி கொடுத்துவிடுகிறீர்கள். எப்படியோ உத்ஸவம் முடிந்து நாம் தங்களிடம் வரும்போது என்னை ஆதரிக்காமல் அபராதமாக வீண் அபவாதங்களைச் சொல்கிறீர்கள்.

நாச்சியார் சன்னிதி வாசலில் பெருமாள் காத்துக் கிடக்கிறார் என்கிற பழிச்சொல் உம்மைத்தான் சாருமே தவிர எமக்கில்லை. என்றபடியே சற்று நகர ஆரம்பித்தார்.

அதற்குள் எதிரில் பேரன்புக்கு உரிய நம்மாழ்வார் வருவதைப் பார்த்து அவர் என்ன செய்கிறார் பார்ப்போம்? என்று காத்திருந்தார்.

சற்றுப் பொறுத்திருந்தபின்,

வருடா வருடம் இதைப் போலவே அக்ருத்யங்களைச் செய்துவிட்டு, நாம் ஒன்றும் அறியமாட்டோம் என்று நினைத்து ப்ரமாணம் பண்ணித் தருகிறோம் என்று சொல்வதே உமக்கு வாடிக்கையாகிவிட்டது.

நமக்கும் பொறுக்க முடியவில்லை. இருந்தும் நமது அய்யா நம்மாழ்வாரின் மங்களமான வாய்மொழிக்காக நாம் பொறுத்துக் கொண்டு உமது புஷ்பங்களை ஏற்றுக் கொள்கிறோம் என்று சொல்லி பெருமாளை உள்ளே வரச் சொன்னார் தாயார் என்று தகவல் வந்தது.

பெருமாளும் தங்கப் பல்லக்குடன் உள்ளே எழுந்தருளினார்.

தாயார் சன்னிதி முன் மண்டபத்தில் பகல் 12 1/2 மணி முதல் 1 3/4 மணிவரை முதல் ஏகாந்தம் ஆகும்.

2 மணிக்கு இருவரும் பங்குனிஉத்திர மண்டபமான சேத்தி மண்டபத்தில் ஏகசிம்மாசனத்தில் எழுந்தருளி 3 மணி முதல் இரவு 10.30 மணிவரை பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்கு அருள்புரிவார்கள் அதன்பின் ஸ்ரீராமனுஜரின் கத்யத்ரயம் பாராயணம் சாற்றுமுறை ஆகும். சின்னபெருமாள் தீர்த்தவாரி கண்டருளுவார்.

இரவு 10.30 மணி முதல் 11.30 மணிவரை 2வது ஏகாந்தமாகும். பின் பெருமாள் தாயார் இருவருக்கும் இரவு 12 மணிமுதல் மறுநாள் காலை 3 மணிவரை திருமஞ்சனம் நடைபெறும்.

விடிய விடிய பக்தர்களுக்கு அருள் பாலித்து விட்டு காலை 3.30 மணிமுதல் 4.30 மணிவரை 3வது ஏகாந்தம் ஆகும். திரை நீக்கி தாயாரை காலை 5.30 மணிக்கு மூலஸ்தானத்திற்கு அனுப்பிவிட்டு 5.45 மணிக்கு பெருமாள் தாயார் சன்னிதியிலிருந்து கிளம்பி கோரதத்தில் எழுந்தருளி வலம் வருவார். முழுக்க முழுக்க தந்தத்தினால் வேலைப்பாடுகள் நிறைந்த அந்த கோரதம் தாயாரின் பிறந்த வீட்டுச் சீராகும். வெகு உத்ஸாகத்துடன் அந்த கோரதத்தில் உலா வந்தபின் பெருமாள் தனது சன்னிதியைச் சென்று அடைவார். இதுதான் மட்டையடி மகாத்மியம்.

இப்படிப்பட்ட மகோன்னத உத்ஸவம் இந்த வருடம் ஏப்ரல் மாதம் வருகிறது. நேரில் கண்டு களித்து இன்புறுவீராக!



# ஆயிரம் கதை சொல்லும் நெல்லையப்பர் சிற்பங்கள்

பேராசிரியர் முனைவ
ச.கணபதிராமன்.




ரதியின் பேரழகு

பொன் திணிந்து புனல் பெருகும் பொருநைக் கரையில் புகழ் பூத்துக் குலுங்கும் திருநகரம் திருநெல்வேலி.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, மதுரைக் காஞ்சியில் பேசப் பெற்ற இந்நகரம், அன்று தொட்டு இன்று வரை தென்பாண்டி நாட்டின் தலைநகராக நின்று நிலவுகிறது.

இங்கு அருள்மிகு நெல்லையப்பர் - காந்திமதியம்பாள் கோவில் உள்ளது. நெல்லையப்பருக்கும் காந்திமதிக்கும் தனித்தனி கோவில்கள் உள்ளன. 850 அடி நீளமும், 756 அடி அகலமும் கொண்ட இக்கோவில் அழகிய ஐந்து கோபுரங்களையும் சிற்பங்களையும் கொண்டது என்கிறார் மேலை நாட்டு அறிஞர் ஒருவர்.

திருக்கோவிலின் கிழக்குவாயில் வழியாகக் கோவிலுக்குள் செல்ல வேண்டும். முதற்கண் நம் கருத்தையும் கண்ணையும் ஈர்க்கும், நந்தி மண்டபத்தைக் காணலாம். வெண்சுதையால் அமைக்கப்பெற்ற மிகப் பெரிய நந்தி. பெருமிதத்தோடு படுத்திருக்கும் பெற்றியே பெற்றி. நந்தி மண்டபத்தின் தென் பகுதியில் மூன்று பேரெழில் மிக்க கற்சிற்பங்கள் கவினோடு காட்சி தருகின்றன. தென் பகுதியில் மேற்கில் ரதி சிலை கற்றூணில் வடிக்கப்பட்டுள்ளது.


மன்மதன்

ரதி தேவியின் கூந்தல் அமைப்பு, கொண்டையின் அழகு, வடிந்து நீண்ட கயல் விழிகள், எட்பூ நாசி, ஈர்க்கு இடைபோகாக் கொங்கைகள், ஒயிலான இடை, ஒய்யாரக் கைகள், கவினார் விரல்கள் கருத்தை ஈர்க்கும் நகப் பொலிவு, பெண்மைக்கே உரிய நாணம், ஒரு காலை நிறுத்தி மறுகாலைக் கொஞ்சம் உயர்த்தி நிற்கும் ஒப்பற்ற அழகு, அணிகலங்கள் இத்தனையும் கொண்டு, குமிண் சிரிப்புடன் நின்றிருக்கும் ரதியின் சிலைக்குக் கீழ்புறமுள்ள கற்றூணில் மன்மதன் சிலை வடிக்கப் பெற்றுள்ளது.

கையில் கரும்புவில், மலர் பாணம், கண்டாரைக் கவரும் பேரழகு, கதித்தெழுந்த தோள், கவர்ச்சி தரும் புன்னகை, யாரையும் வெற்றி கண்டு விடுவேன் என்ற வெற்றிப் பெருமிதம். அனைத்தையும் ஒருங்கே இணைத்துச் சிற்பி மிகச் சிறப்பாகக் காமனை வடித்துள்ளான்.


மன்மதன் முதுகில் . ஆமை

மன்மதன் சிலை அருமையான கருத்தை உள்ளடக்கி ஒளிர்கிறது. வேறு எந்தக் கோவிலிலும் இல்லாத தனிச் சிறப்பு இந்த மன்மதன் சிலைக்கு உண்டு எனலாம்.

மன்மதன் ஐம்புலன்களையும் அடக்கும் முனிவர்களைக் கூட தன் மலரம்பைச் செலுத்தி வெற்றி பெறக் கூடிய ஆற்றல் மிக்கவன்.

காமனது கணைக்கு இலக்கு ஆகாதார் யாருமே இல்லை. முனிவர்கள் ஐம்புலன்களையும் அடக்கும் ஆற்றல் பெற்றவர்கள். ஐம்புலனடக்கத்திற்கு ஆமையை உவமையாகச் சொல்லப்படுவது மரபு.

''ஒருமையுளாமை போல் ஐந்தடக் கலாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து''
என்பது திருக்குறள்.

ஐம்புல அடக்கத்திற்கு உவமையாகச் சொல்லப்படும் ஆமையினையே (அதாவது ஐம்புல அடக்கத்தையே) வெற்றி கண்டுவிட்டான் மன்மதன்.

அதனால் ஆமையினை ஒரு கூடையில் கொண்டு தன் முதுகின் புறத்தே மன்மதன் அமைத்துக் கொண்டான்.

ஐம்புல அடக்கத்தின் அடையாளமான ஆமை, மன்மதன் முன்னர் தோற்று புறம்போகிவிட்டது என்ற மிகச் சிறந்த கருத்தைச் சிற்பி உள்ளடக்கி இத்திருக்கோவிலில் மன்மதன் சிலையை அமைத்துள்ளான்.

நெல்லையப்பர் கோவிலுக்குத் தனி அழகூட்டும் இச்சிலையை அடுத்து குறத்தியின் சிலைதூணில் வடிக்கப்பட்டுள்ளது.

**குறமகளின் பேரழகு**

குறத்தியின் கொண்டையழகே அழகு. அவள் அணிந்திருக்கும் மணி, மாலைகள் - மார்புக்கச்சு - ஒட்டிய வயிறு - கட்டியுள்ள ஆடை, தோளில் குழந்தை, குழந்தைக்குச் சோறூட்டும் தன்மை, கையில் சோற்றுக் கிண்ணம், பக்குவமான பார்வை, அருகில் குறவன், சோறுண்ணும் குழந்தைக்கு விளையாட்டுக் காட்டும் பாவனையில் அவன் கையில் 'கிலுக்கு' அனைத்தையும் சிற்பி, ஒரே கல்லில் வடித்திருக்கும் வனப்பே வனப்பு.

இந்தக் கவின் சிலைகளைக் கண்டு கோவிலுக்குள் செல்லும் முன்னர், நந்தியின் முன்பு, கவினார்ந்த சிற்பங்களைக் காணலாம்.



இச்சிற்பங்களில் ஒன்று வீரபத்திரர் - சீரிய முகம், வீரிய நோக்கம், கையில் வாள், கழுத்தில் மண்டையோட்டு மாலைகள், போருக்குப் புறப்படும் நிலையிலுள்ள துடிப்பு, அனைத்தையும் சிற்பி அற்புதமாக வடித்துத் தந்திருக்கிறார்.

**பகடை ராஜா**

வீரபத்திரருக்கு வலப்பக்கம் மிடுக்கான பொலிவுடன் பகடை ராஜா சிலை வடிக்கப்பட்டுள்ளது. தீயுமிழும் கண்கள், பருத்துத் திரண்ட திண் தோள்கள், முறுக்கேறிய நரம்புகள், தருக்குமொழி பேசத்துடிக்கும் இதழ்கள், இடுப்பில் கட்டாரி, இடக்கையில் வாங்காவாத்தியம், துடித்தெழத் துடிக்கும் தோற்றம்.



அனைத்தையும் கொண்ட பகடை ராஜா பார்ப்பவரையே கலங்க வைக்கும் தன்மையில் செதுக்கப்பட்டுள்ளார்.

பகடை ராஜாவை, ஒரு சிலர் வீரபத்திரரின் தளபதி என்பர். 'பகடை' என்ற பெயர் அருந்ததியர் சமுதாயத்திற்கு உள்ள மறுபெயர்.

மன்னர்கள் இவர்களைத் தமது படை வரிசையில் சேர்த்து மிக முக்கியப் பொறுப்புக்களைக் கொடுப்பர். வீரத்திற்கும், உண்மைக்கும், நாணயத்திற்கும், நன்றிக்கும் இலக்கணமான இவர்களை வீரபாண்டிய கட்டபொம்மன் தன் படை வரிசையில் கொண்டிருந்தான்.

முத்தன் பகடை, பொட்டிப் பகடை என்ற பெரும் வீரர்களும் வீரபாண்டிய கட்டபொம்மன் படை வரிசையில் நின்று தாய் மண்ணைக் காக்கத் தங்கள் நல்லுயிர் ஈந்தவர்கள். ஏனோ வரலாறு இன்னும் இவர்களை அறியவில்லை? ஒதுக்கி வைக்கப் பெற்ற பகடை, நெல்லையப்பர் கோவிலில் சிலை கொண்டு பகடை ராஜாவானது பெருமைக்குரியது.



**கர்ணன்**

வாயிலின் வடக்குப் புறத்தில் கர்ணன் சிலை, செஞ்சோற்றுக் கடன் கழிக்கச் சீறியெழும் பொலிவுடன், குதிங்காலை ஊன்றி,

வீரநடை போட்டிட ஆயத்தமாகும் நிலையில் கர்ணன் சிலை வடிக்கப்பட்டுள்ளது.

கையில் நாகபாசம், கண்களில் தீப்பிழம்பு, கால்களில் வீரக்கழல் இச்சிலையிலும் சிற்பி ஒரு புதுமையைச் செய்துள்ளான். கர்ணனின் கையில் உள்ள நாகபாசத்தை (நாகத்தை) கர்ணனின் முதுகுத் தோள்புறத்தில் ஒரு மயில் கொத்திக் குதறுவதாக அருமையாகச் சிலை வடித்திருக்கிறான்.

மயில் போன்ற வண்ணம் கொண்ட கண்ணன் புறத்தேயிருந்து (சூழ்ச்சியாக) கர்ணன் அழிவுக்குக் காரணமான வரலாறு இதில் அமைக்கப்பட்டுள்ளதோ என்று தோன்றுகிறது. கர்ணனுக்கு அடுத்து பாசுபதத்தோடு அர்ச்சுனன் சிலை அமைக்கப்பட்டுள்ளது.

**இசைத்தூண்கள்**

இவற்றைக் கண்டு களித்து, இசைத்தூண்களில் இசைநயம் கேட்டு மகிழ்ந்து, நெல்லையப்பர் சந்நிதிக்குள் சென்று பெரிய புராணச் சிற்பங்களையும், நாட்டிய முத்திரைகளையும் கண்டு களித்து நெல்லையப்பரை நெஞ்சுருகி வணங்கலாம். முழுதும் கண்ட ராமக்கோன் கோடரியால் வெட்டிய காயம் நெல்லையப்பர் தலையில் இன்னும் தழும்பாக உள்ளதன்மையினையும் காணலாம்.

நெல்லையப்பருக்கு வடக்குப் பக்கத்தில் நெல்லைக் கோவிந்தர் பாம்பணை மேல் பள்ளி கொண்டிருக்கும் மாண்பு கண்டு, வணங்கத்தக்கது.

**அகத்தியர்**

நெல்லையப்பரை வணங்கித் திருச்சுற்றில் வரும் போது, தெற்குச் சுற்றில் அகத்தியர் திருமேனியினைக் காணலாம். இருட்டறையில் அகத்தியர் தம் பன்னிரு மாணவர்களோடு காட்சி தருகிறார். பன்னிரு மாணவர்களோடு அகத்தியர் காட்சி தருவதை நெல்லையப்பர் கோவிலிலேயே காணலாம்.

நாயன்மார்கள், ஏழு கன்னியர் கல்லால் வடிவமைக்கப் பெற்ற தாமிர சபை, ஆறடி உயரத்திலுள்ள நடராஜப் பெருமானின் செப்புத் திருமேனி ஆகியவற்றைக் கண்டு வடக்குச் சுற்றிலிருக்கும் திருமகளை வழிபட்டு, நவராத்திரி மண்டபத்திற்கு வரலாம்.

**நவராத்திரி மண்டபம்**

நவராத்திரி மண்டபத்தின் முன்னர் இரண்டு கல்தூண்கள் கோபுரம் அமைப்பில் செதுக்கப்பட்டுள்ளன. அவை அற்புதமாக உள்ளது. மண்டபத்தின் மீதிருந்து நாகம் ஒன்று விரைந்து இறங்கிவரும் முறையில் வடிக்கப்பட்டுள்ள காட்சி வனப்பாக உள்ளது.

மண்டபத்தின் முன்னர் மேற்குப் பகுதியில் அர்ச்சுனன், அல்லி சிலைகளும், எதிரில் பவளக்கொடி சிலையும் வடிக்கப்பட்டுள்ளன. பவளக் கொடியின் சிலை பார்ப்பதற்கு மிக அழகாக உள்ளது. முகத்தில் சினம் கலந்த ஏக்கம், இதழில் இனம் புரியாத ஏக்கக் குறிப்பு, கதித்தெழுந்த, தளராத மார்பங்கள், அவற்றின் மீது சிறிய மெல்லிய கயிறு போன்ற கச்சு, கை விரலால் 'உன்னை என்ன செய்கிறேன் பார்' (சக்களத்தி அல்லியை நோக்கி) என்ற குறிப்பு, பவள மாலைகள், பவளக் கொடிகள் அனைத்தையும் கொண்டு



பவளக் கொடியைச் சிற்பி செதுக்கியுள்ளான்.

தெற்குத் திருச்சுற்றும் காந்திமதியின் கவினும்

இவையனைத்தையும் கண்டு, தெற்குச் திருச்சுற்று வழியாக செல்லும் போது, இக்கோவிலுக்குத் திருப்பணி செய்த நாயக்க மன்னர்களின் சிற்பங்களைக் கண்டு

ஒரேகல்லால் செதுக்கப்பெற்ற ஆறுமுக நயினாரையும், வள்ளி, தெய்வானை அம்மையரையும் வணங்கி சுற்றி வந்து சங்கிலி மண்டபத்தை அடைந்து, அங்குள்ள பச்சைநாயகி, அர்ச்சுனன், அனுமன், பீமன், யாளிகள் சிலைகளைக் கண்டு, காந்திமதி அம்மையின் சந்நிதிக்கு வர, காந்திமதி நம்மை வாவென்று அழைப்பாள். நின்ற கோலத்தில், வைரமணிமுடி சூடி, ராக்கொடி, மூக்குபொட்டு, மூக்குத்தி, புல்லாக்கு சூடி, மார்பில் நவமணி வடம் புரள, காலில் சிலம் பொலிக்க, புதுப்பெண்ணாக பொலிவு தந்து,

வலக்கையில் கிளியுடன், செண்டையும் கொண்டு, இடக்கையைக் குழைத்து தாழ்த்தி நிற்கும் அந்த வடிவழகைக் கண்டு தான் புலவர்கள் 'நெல்லை வடிவன்னையே' என்று போற்றினார் போலும்.

சம்பந்தப் பெருமான் இந்தப் பேரழகைக் கண்டு தான் 'கதிர் நிலா அம்மை' (காந்திமதிக்கு தமிழ்ப் பெயர்) என்று பாடினார் போலும்.

காந்திமதி அம்மையை வழிபட்டு, எதிரிலுள்ள ஊஞ்சல் மண்டபத்தையும், யாளிச் சிற்பங்களையும் பொற்றாமரைக் குளத்தின் பொற்பையும், வசந்த மண்டபத்தின் வனப்பையும் கண்டு தொழுது வணங்கி வரலாம்.

**அனவரதன்**

நெல்லையப்பர் அனைத்து சமயத்தாருக்கும் வாழ்வளிக்கும் வள்ளல். சமயத்திற்கு அப்பாற்பட்டவர். முகமது அலியின் படைத் தளபதி அன்வர்டிகான். இவனது மனைவிக்கு தீராத நோய். சான்றோர்கள் ''நெல்லையப்பரை வழிபட்டால் நோயும் தீரும், மகப்பேறும் கிட்டும்'' என்றனர். வழிபட்டான். மனைவியின் நோயும் தீர்ந்தது. மகப்பேறும் கிட்டியது.

அன்வர்டிகான் லிங்கம் அமைத்து கோவிலின் தென்கிழக்கு மூலையில் எழுந்தருளச் செய்தான். அது அனவரத நாயகனாக நின்று அடியார்களுக்கு அருள் பாலித்து வருகிறது.

**நெல்வேலி கொண்ட நெடுமாறன்**

நெல்லையப்பர் திருக்கோவிலை கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த நின்றசீர் நெடுமாறன் கட்டினான் என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இவனை 'நிறை கொண்ட சிந்தையன்', 'நெல்வேலி கொண்ட நெடுமாறன்' என்று சுந்தரர் குறிப்பிடுகிறார்.

இவனுக்குப் பின்னர் வந்த பாண்டியர்கள், நாயக்க மன்னர்கள், இக்கோவிலுக்குத் திருப்பணிகள் செய்து விரிவாக்கினர்.

சிவந்தியப்ப நாயக்கர், தளவாய் அரியநாதர், அழகப்ப முதலியார், வேங்கட கிருட்டிண முதலியார், வடமலையப்ப பிள்ளையன், திருமலையப்ப பிள்ளையன் சிவசூரியப் பரதேசி, சுந்தரத் தோழபிள்ளை ஆகிய சான்றோர்கள் திருப்பணிகள் செய்துள்ளனர்.

**இலக்கியச்சிறப்பு**

திருஞான சம்பந்தப் பெருமான் நெல்லையப்பரைப் பாடியுள்ளார். காந்திமதி யம்மை பிள்ளைத்தமிழ், நெல்லை வருக்கக் கோவை, நெல்லை மணிக்கோவை, தல புராணம், நெல்லை அந்தாதி, நெல்லைச் சிந்து போன்ற நூல்களும் நெல்லையப்பர் காந்திமதி அருளாட்சியைப் போற்றுகின்றன. சோழர் பாண்டியர், நாயக்கர் கல்வெட்டுக்கள் மிகுதியாக உள்ளன. கல்வெட்டுக்களில் திருநெல்வேலி கீழ்வேம்ப நாட்டு குலசேகர சதுர்வேதிமங்கலம் என்று குறிக்கப்படுகிறது.

நெல்லையப்பர் சிற்பங்கள் ஆயிரம் கதை சொல்லும் சிற்பங்கள் என்றால் மிகையன்று. அவை அனைவரும் காண வேண்டிய அற்புத சிற்பங்கள்.

## பணிவினால் பெறலாம் பயன்



தண்ணீர் இறைக்கும் ஏற்றம் பணிவதனால் கிணற்றிலுள்ள நீரை முகக்கின்றது, அவ்வாறே ஆன்றோர்களிடம் பணிந்தால் அவர்கள்பால் தேங்கிக் கிடக்கும் அறிவுவெள்ளத்தை நாம் முகர்ந்து கொள்ளலாம்.

துலாக்கோலில் தாழ்ந்த தட்டுக்குத்தானே பெருமை. காய்த்துப் பழுத்துப் பயனுடைய மரக்கிளை தாழ்ந்து இருக்கும். காய்கனி இல்லாத கிளைகள் உயர்ந்து நிற்கும். எதற்குப் பெருமை? தாழ்ந்த கிளைக்கா? உயர்ந்த கிளைக்கா? எண்ணிப் பாருங்கள்.

சுவாமி விவேகானந்தர்

# தனிப்பாடல் காட்டும் திருமால் பெருமை

முனைவர் தி.இராசகோபாலன்



வைணவத்தில் தனிநாயகனாகத் திகழ்கின்ற திருமால், துதிப்பதற்கு மட்டுமன்றித் துய்ப்பதற்கும் உரியவனாய் இருக்கின்றான். வேத வேதாந்தங்களுக்கும் உபநிஷத்துக்களுக்கும் தோன்றாதவனாக இருக்கின்ற பெருமாள், ஒரு பக்தனுக்குத் தீங்கு என்றால் ஓலைகட்டித் தூது போகின்றான். பரம்பொருளுக்குப் பிறவியில்லை என்று சொல்லுகிறோம். ஆனால், திருமால் பத்து அவதாரம் எடுத்திருக்கிறான்.

குஞ்சுக்குப் பயிற்சி தருகின்ற தாய்க்கோழி, சில சமயங்களில் குஞ்சுகளாலேயே கொத்தப்படுவது போல், எல்லாவுயிர்களையும் காக்கின்ற பெருமாள் சிலசமயங்களில் தன்னுடைய பக்தர்களாலேயே சீண்டப் பெறுகிறான். தன்னுடைய பிறவியைத் தொலைக்க வேண்டி, திருக்கண்ணபுரத்து திருமாலிடம் குறையிரக்கும் காளமேகப் புலவர், ''கன்னபுர மாலே! எல்லாக் கடவுள்களைக் காட்டிலும் நீபெரியவன். ஆனால், உன்னைக்காட்டிலும் நான் பெரியவன். காரணம், உனக்கோ பிறவி பத்துமுறை, சிவனுக்கு ஒன்றுமில்லை, எனக்கோ எண்ணத் தொலையாத பிறவிதெரியுமா? '' எனத் திருமாலை நெருங்கிப் பாடுகிறார்.

**(''கன்னபுர மாலே! கடவுளினும் நீயதிகம், உன்னிலுமே யானதிகம் ஒன்றுகேள்! முன்னமே உன்பிறப்போ பத்தாம், உயர்சிவனுக்கு ஒன்றுமில்லை; என்பிறப்பே எண்ணத் தொலையாதே'' என்பது பாட்டு.)**

காலம் ஊடாடாத உலகத்தில் இருப்பவன், காலம் ஊடாடுகின்ற உலகத்திற்கு வருவானேன்? அல்லவரை அழிப்பதற்கும் நல்லவரைக் காப்பதற்கும் வருகின்றானெனில், 'அதனை அவன் இருந்த இடத்திலிருந்து செய்யலாமே' எனக் கேட்கலாம். அழுகின்ற குழந்தைக்கு ஆறுதல் சொல்ல பத்துத் தாதியார்கள் இருந்தாலும், அழுகுரலைக் கேட்டவுடன் பெற்றதாய் பதறியடித்துக் கொண்டு வருவதில்லையா, அதைப்போல் தான் பெருமாளும் எந்தப் பக்தனுக்குத் துன்பம் என்றாலும், தானே தாயும் தந்தையுமாகி ஓடிவருகிறான்.



**''உடையானுக்கு அன்றி உடைப் பொருளைக் காக்க, படையார்தமக்கு உண்டோ**

**பாரம்-அடைவாகச் சீதரனார் காக்க திருவவதாரம் செய்வார்;**

**சேதனாருக்கு ஏன்அச் செயல்?''** எனத் திருமால் பக்தியில் தோய்ந்த பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் பாடுவார்.

கொடுத்தும் கொண்டும் வருகின்ற வாழ்க்கையில்தான் மலர்ச்சி ஏற்படும். சேற்றுக்குக் கீழே புதையுண்டுக் கிடக்கின்ற கிழங்கிற்குப் புதுவெள்ளம் வளர்ச்சியைத் தருகின்றது. தாமரை வளர்ந்து வளர்ந்து தண்ணீருக்கு மேலே வந்துவிடுகிறது. வளர்ச்சியைக் கொடுத்த தண்ணீர், மலருக்குக் கீழே நிற்கிறது. அதுபோன்று பரம்பொருள், தான் தோற்றுவித்த பாகவதனுக்குக் கட்டுபட்டு, அவ்வாறு கட்டுப்படுவதிலே மகிழ்ச்சியும் காண்கின்றான். திருமகள் வாசம் செய்யும் பரமபதத்தை விட்டு, முடைநாற்றம் வீசும் ஆயர்பாடிக்கு வருகின்றான், நெடுமால். ஆய்பாடி வந்த கண்ணனை வேதம் நாறும் வாயினை உடையவன் என்பது அறியாமல், ஆய்ச்சியர்கள் மாடு கட்டும் தாம்புக் கயிற்றால் கருத்த மேனி சிவப்படையும்படி அடிக்கிறார்கள் மத்தால், மொத்தி 'திருட்டுப் பயலே' எனத் தட்டுகிறார்கள்.

**''குன்று குடையா எடுத்துக் கோவைக் காத்த கோபாலா: நின்பெருமை கூறக்**

**கேண்மோ? அன்றுமலர் வந்தவள் தன்வீட்டை விட்டு ஆயர்மனை வந்ததனால்,**

**ஆயர்மாதர் கன்றுகட்டும் தாம்புகொண்டே உரலில் கட்டிக் கரியதிருமேனி**

**சிவப்பேற, மத்தால் என்றும் அழியாப் பெயராத் 'திருடன்' என்றே ஏற்றியதும் உன்தலையில் எழுத்துத் தானே''**

எனத் தனிப்பாடல் புலவர், தம் தலையெழுத்தைக் காட்டிலும், அவன் தலையெழுத்து மோசம் என்று பாடுகிறார், அவனுடைய எளிவந்த தன்மையை.

மற்றொரு தனிப்பாடல் புலவர் ஒருவரை, இன்னொரு புலவர் பார்த்து, 'ஈக்கள் உட்கார மலை எப்பொழுது குலுங்கிற்று?' எனக் கேட்டார். அதற்கு முதற்புலவர் ''ஆய்ச்சியர்கள் வெண்ணெய்யுண்ட கண்ணனை மத்தால் அடித்தபொழுது, அவன் மேனியில் புண் உண்டாகியது. அந்தப் புண்ணில் ஈக்கள் மொய்க்கும் அளவுக்குக் கண்ணன் சௌலப்பியம் உடையவன் ஆனான். அந்தக் காட்சியைக் கண்ட மலைகள் மட்டுமல்ல, அண்ட சராசரங்களே குலுங்கின'' என மனங்குழைந்துப் பாடினார், அப்புலவர். திருமால் ஆயிரம் தாமரைப் பூத்தாற் போல் அழகைக் கொண்டவன். பெருமாளின் சௌந்தர்யத்தில் மயங்கிய திருப்பாணாழ்வார், **''கோலமாமணி ஆரமும் முத்துத் தாமமும் முடிவில்லதோர் எழில் நீலமேனி'' ஐயோ நிறைகொண்டது என் நெஞ்சினையே''** எனப் பாடுவார். நெடுமாலின் ரூப சௌந்தர்யத்திலே தம்மை முற்றிலுமாக மறந்துபோன நம்மாழ்வார், ''பெருமாளே: உன் திருமுக ஒளி, திருமுடியின் ஒளியாக வளர்ந்ததோ? திருவடிகளின் ஒளி, நீநிற்கும் தாமரையாகப் பரந்ததுவோ? உன் இடையழகு, ஒளிரும் பொன்னாடையாக - அணிகலன்ளாக உன் திருமேனியில் கலந்ததுவோ? எனக்கு அதுபற்றிச் சொல்லுவாயாக'' எனவேண்டுகின்றார்.

*(''முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ?*
*அடிச்சோதி நீநின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ,*
*படிச்சோதி ஆடையொடும் பல்கலனாய், நின்பைம்பொன்*
*கடிச்சோதி கலந்ததுவோ? திருமாலே: கட்டுரையோ'' என்பது பாடல்)*

திருமால் குடிகொண்டிருப்பதாலேயே, வெறுஞ்சோலை, திருமாலிருஞ்சோலை யாயிற்று. சாதாரண மலை, அந்த அழகன் இருந்ததால், அழகர்மலையாயிற்று.

இத்தனை அழகு படைத்த திருமாலைக் காளமேகப் புலவர் நிந்தாஸ்துதியாகப் பாடும் பொழுது, மேலும் அவன் அழகு பீறீட்டெழுகிறது. ''திருமாலே: உனக்கு யார் அழகன் என்று பெயரிட்டது. ஓர் அவதாரத்தில் மீனுடைய மூஞ்சியோடு வந்தாய், இரண்டாவதில் ஆமை முகத்தோடு வந்தாய், மூன்றாவதில் பன்றி முகத்தோடு வந்தாய். நான்காவதில், சிங்கமுகத்தோடு வந்தாய், இனியடுத்து குதிரை முகத்தோடு வரப் போகின்றாய், இப்படிப்பட்ட உன்னை யார் அழகன் என்று சொன்னது'' என அப்புலவன், நிந்தாஸ்துதியாகப் பாடுகின்ற பாட்டிலே கூட அழகு கொஞ்சுகின்றது. திருமண வீட்டில் மாப்பிள்ளை வீட்டார் பெண்ணையும், பெண்வீட்டார் மாப்பிள்ளையையும் பழித்துப் பாடுகின்ற நலங்குப் பாடலே, இருவரின் அழகையும் உயர்த்துதல் போல், காளமேகப் புலவனின் வஞ்சப்புகழ்ச்சியும் பெருமாளின் பெருமையை உயர்த்துகின்றது.

திருமாலுடைய பெருமை என்ன வென்றால், தன்னுடைய திருவருளை உபாசிக்கும் ஆச்சாரியர்களுக்கும் ஆழ்வார் களுக்கும் வழங்கிவிடுவான். அயல்நாட்டிலே இருக்கும் கோடீசுவரர்கள், உள்நாட்டிலே சிலரைப் 'பவர் ஏஜென்டுகளாக' நியமிப்பது உண்டல்லவா? திருக்குறுங்குடி நம்மாழ்வார் அவதரித்த தலம். அத்தலத்தில் பாகவதர் சாப்பிட்டுவிட்டு மீதம் வைத்த திருவமுதை ஒரு நாய் சாப்பிட்டு விட்டது. அதனைக் கண்ட நம்மாழ்வார், பாகவதர் உண்ட எச்சிலையுண்ட அந்த நாய்க்குப் பரமபத பேறு அளித்தார். அதனை அந்த வழியே சென்ற கருவூர்ச் சித்தர் எனும் புலவர் பார்த்துவிட்டார். உடனே நம்மாழ்வாரிடம் சென்று, ''ஆச்சாரியனே: அந்த நாய்க்குப் பரமபதம் அளித்த நீ, பேயனாகிய எனக்கும் தரக்கூடாதா? 'என்னால் முடியாது' என்று உன்னால் சொல்ல முடியாது. ஏனென்றால், உன்னுடைய கவி, உன்னுடைய தமிழ், இருந்த கோலத்தில் இருக்கும் பெருமாளைக் கொஞ்சமாகக் கிடந்த கோலத்திற்குச் செல்ல வைக்கக் கூடியது. என்பதை நான் அறிவேன்'' எனப் பெருமாள் ஆழ்வாருக்கு அளித்த அங்கீகாரத்தை பாடுகின்றார்.

*(''வாய்க்கும் குருகைத் திருவீதி எச்சிலை*
*வாரியுண்ட நாய்க்கும் பரமபதம் அளித்தியால்; அந்த*
*நாயோடு இந்தப் பேய்க்கும் பதம் அளித்தால் பழுதோ?*
*பெருமாள் மகுடம் சாய்க்கும் படிக்கும் கவிசொல்லும்*
*ஞானத்தமிழ்க் கடலே'' என்பது பாட்டு)*

தனிப்பாடல் புலவர்கள், ஆழ்வார்களின் பாடல்களில் ஆழங்கால் பட்டவர்கள் என்பதால், திருமாலின் அம்சங்களைப் பல்வேறு கோணங்களில் பார்த்திருக்கிறார்கள். வான வில்லில் உள்ள ஒவ்வொரு வண்ணமும் ஓரழகைப் பெற்றிருப்பது போல, தனிப்பாடல் புலவர்கள் காட்டும் கார்மேனி வண்ணனின் ஒவ்வோர் அழகும், அழகுக்கு அழகு செய்யக் கூடியதாகும். தனிப்பாடல் புலவர்கள் ஒரு புள்ளியிலிருந்து முழுமையைப் பார்ப்பதால், பெருமாளிடம் பல அதிசயராகங்கள்ரீங்காரமிடுகின்றன.

# திருச்சிற்றம்பலம்

தொகுத்தவர் - மு.அருணகிரி

**வாழ்க அந்தணர்**

**வாழ்க அந்தணர் - வானவர் ஆனினம்**
**வீழ்க தண்புனல் - வேந்தனும் ஓங்குக**
**ஆழ்க தீதெல்லாம் அரன் நாமமே**
**சூழ்க வையகமும் துயர் தீர்கவே**

- திருஞானசம்பந்தர் தேவாரம்.

யாவரும் இப்பாவினை அறிவார்கள். கேரளாவைச் சேர்ந்த நாராயண குருதேவரை நெறிப்படுத்தியது இப்பாடலேயாகும். சைவ சமயப் பற்றுள்ளவர்கள் இப்பாடலை உள்ளம் உருகிப்பாடுவார்கள். திருமுறை ஓதுவார்கள் யாவரும் இப்பதிகத்தையே கடைசியாக ஓதி முடிப்பது வழக்கம். இப்பாடல் உயர்ந்த உள்ளத்தை வயப்படுத்தக் கூடியது. ''உலகம் உயர்ந்தோர் மாட்டே'' எனும் தொடருக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். ஒப்பற்ற பண்பாட்டை விளக்குவதற்கு இப்பாடல் ஒன்றே போதும்.

''வாழ்க அந்தணர்'' என முதற்கண் அந்தணர்க்கு வாழ்த்துச் சொன்னார் சம்பந்தர். காரணம், இறைவணக்கமே தினசரி வாழ்க்கையில் முதற் கடமையாம். உலகில் முதல் அந்தணர் கடவுளே, முதல் கூலியாளும் இறையே. திருத்தொண்டத் தொகையை இயற்றிய சுந்தரர். ''தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்'' என்றே பாடியுள்ளார்.

இங்கு அந்தணர் எனும் பதம், பிறந்து வளர்ந்து, இறக்கும் மனிதவர்க்கத்தைக் குறிக்காது. ஆதிபகவானாகிய கடவுளையே குறிக்கும். மனித வர்க்கத்தைக் குறித்து பாடியிருப்பின், தில்லை வாழ் அந்தணர்கள் தம் அடியார்களுக்கும் அடியேன் என்று தான் சுந்தரர் பாடி இருத்தல் வேண்டும் மாறாக தில்லை - வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் என அந்தணர் எனும் பதம் ஒருமையில் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

ஊறுகாய் எனும் பதத்தை சில கவிகள் வினைத்தொகை என்பர். இப்பதத்தில் மூன்று காலங்களுக்கும் பொருத்தி, பொருள் மறைந்துள்ளதால், ஊறினகாய், ஊறுகின்ற காய்? ஊறும் காய் என விரிப்பர். இது போன்றே, வாழ்கின்ற அந்தணர் எனும் சொல் வினைத்தொகையாம். வாழ்ந்த அந்தணர்,

வாழ்கின்ற அந்தணர், வாழும் அந்தணர் எனப் பொருள் விரியும். முக்காலத்தும் மாறாது விளங்குபவன் முக்கண்ணுடைய இறைவன் அன்றி, இரு கண்களையுடைய மக்களோ, மாக்களோ ஆகார். தில்லையில் அன்றும் இன்றும் என்றும் விளங்கும் நடராஜ பெருமானைக் குறிப்பது. ''வாழ்க அந்தணர்'' என்பது எப்போதும் அழகிய அருளையுடைவன் ஆண்டவன் ஒருவனே.

மேலே கூறிய சம்பந்தர் பாடலில் வாழ்க அந்தணர் என்பதற்குக் காரணம், இறைவனும் வாழ்க. அடியார்களும் வாழ்க எனக் கொள்ளுதல் வேண்டும். ஆண்டவனுக்கு பல்லாண்டு பாடினால் பாடுவோனும். பல்லாண்டு வாழ்வான், அம் + தண் + அன் எனப் பிரித்தால் அழகிய அருளையுடைவன் மனிதன் ஆகப் பிறந்தாலும் அவன் அந்தணனே! எவனும் அந்தணப் பிறவிக்குரியன். ஆகையால் - அந்தணர் எனும் சொல் ஒரு ஜாதியைக் குறிக்காது. அருணகிரியாரும் தாம் பாடிய ''வேல் வாங்கு வகுப்பில்'' அணி குறமின்புணர் தணிகையில் அந்தணன்'' என்னும் வார்த்தையை முருகப் பெருமானுக்கு அற்பணித்து பாடப் பெற்றுள்ளதைக் கவனிக்கலாம். அதே வகுப்பில் உமாதேவியைக் குறித்து அபயவரம்புரி உபயகரந்திகழ் அந்தணி எனப் பெண்பாலில் பாடியுள்ளதும் இறைவியையே குறிக்கும் என்பதனை உறுதியாக்கும் வகையில் ஆளப்பட்டுள்ளது.

**''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்**
**சிறப்பொவ்வா**

**செய்தொழில் வேற்றுமை யான்''**

எனும் திருக்குறள் சான்றாகும் இவ்வுண்மைக்கு.

**''அந்தணர் என்பார் மற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்.''** தொண்டும், ஞானமும் இல்லான் அந்தணன் ஆகான். அருளாளனே அந்தணன் எனப்படுவான். மற்றவர்க்காக வாழ்பவனே அந்தணன். எல்லா உயிர்களிடத்தும் (மக்கள், மாக்கள், புள்ளினம், தாவரம் முதலியன) செம்மையான கருணை உள்ளத்தோடு ஒழுகுகின்றவர்களே அந்தணர் என்பர்.

இதனடிப்படையில்

**ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்**

**நன்றே நினைமின் நமனில்லை நாணாமே**

**சென்றே புகுங்கதியில்லை நுஞ் சித்தத்து**

**நின்றே நிலை பெற நீர் நினைத்துய்மினே**

**என உலகிற்கு திருமூலர் போதனை அருளியுள்ளார்.**

இதனையே அருணகிரியாரும் திருவானைக்கா, திருப்புகழ், ஓலமறைகள் அறைகின்ற ஒன்றது, எனும் பாடலில் சாதிகுலமும் இலது அப்பரம்பொருள் என்று இறைவனையே சுட்டிக் காண்பித்துள்ளார். இறைவனுக்கு ஜாதி பேதமே கிடையாது

தாழ்ந்தவர் என தாமே நினைத்துக் கொண்டு, என் கால் திருவரங்க கோயிலிலே படலாமா என திருப்பாணாழ்வார் இறைவனிடம் விண்ணப்பிக்க, அரங்கனே தனது அடியார்களில் ஒருவரான அந்தணரையே திருப்பாணாழ்வாரைத் தோளில் சுமந்து வரும்படி செய்த வரலாற்றினை நாம் அறிந்துள்ளோம். இறைவனுக்கு சாதி மதம் கிடையாது என்பதற்கு இதைவிட வேறு என்ன உதாரணம் தேவை.

நந்தனார், தன்னை தாழ்ந்த குலத்தவராக எண்ணியதால், சிதம்பரம் திருக்கோயிலுள் நுழையத் தயங்கினார். இன்னல் தரும் இழி பிறவி இது தடை என்றே துயில்வார் என்கிறார் சேக்கிழார். நந்தனார் தம் பக்தியால் அந்தணர்களாலும் வணங்கத்தக்க நிலை பெற்றார். எனவே குலத்தினால் எவரும் உயர்ந்தவராகக் கருத முடியாது குணத்தினால் தான் கருத முடியும்.

# தென்திசைக் கடவுளும், ஞானக் கடவுளும்



ஜி.ஆர். சுப்பிரமணியன்

ஞானத்தைத் தரும் வித்யைக்கு அதிபதிகள் இருவர். ஒருவர் ஈஸ்வரன்அம்சமான தக்ஷிணாமூர்த்தி. தென்திசையில் கல்லால மரத்தடியில் ஒருகாலை மடித்து மோன நிலையில் அமர்ந்திருக்கிறார்.

கலைகளுக்கும். கல்விக்கும் அதிபதியாக ஸ்ரீசரஸ்வதி விளங்குகிறார்.

தக்ஷிணாமூர்த்தி மற்றும் சரஸ்வதி தேவியின் பல திவ்ய குணாம்சங்களை ஒப்பு நோக்கும் விதத்தில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

அருளே திருமேனியாகக் கொண்ட இறைவன் தான் நினைத்த மாத்திரத்தில் நினைத்த வடிவத்தை மேற்கொள்ளும் ஆற்றல் உடையவன். உலகில் தோன்றிய உயிர்களெல்லாம் தன்னை அறிந்தும், கண்டும், கருதியும், வாழ்த்தியும் வணங்கியும் உய்தற் பொருட்டே இவ்வரிய உருவங்களை அவன்தாங்கி அருளுகின்றான்.

அவனது இந்த உருவத்திருமேனியைப் போகவடிவம் என்றும், யோக வடிவம் என்றும், வேக வடிவம் என்றும் மூன்றாய்ப் பிரித்துச் சித்தாந்த சாஸ்திரங்கள் கூறும். அதில் தட்சிணாமூர்த்தி யோக வடிவமாகும்.

சிவபரம்பொருளே ஆதி குருவாக, தட்சிணாமூர்த்தியாக சநகர், சநந்தனர், சநாதனர், சனத்குமாரர் எனும் முனிசிரேஷ்டர்களுக்குக் கல்லால மரத்தின் கீழ் தென்திசைநோக்கி அமர்ந்து, வேதப் பொருளை மௌனமாக உபதேசித்தருளிய திருஉருவம்.

இந்நிகழ்ச்சியை.

**''ஞாலம் நாறு நலங்கெழு நல்லிசைநான் மறை முதநூல்முக்கட் செல்வன் ஆல முற்றம்''** என்று அகநானூறும், ஆலமர் தெய்வம் என்று புறநானூறும் விரித்துச்சொல்கின்றன.

சாதாரணமாக குரு வயது முதிர்ந்தவராகவும், சீடர்கள் வயதில் இளைஞர்களாகவும் இருப்பது உலக இயல்பு. ஆனால், தக்ஷிணாமூர்த்தியோ வயதில் இளையவராகவும், அவரிடம் வேதப் பொருள் அறிய வரும் முனிவர்கள் வயதில் முதியவர்களாகவும் இருப்பது அற்புதத்திலும் அற்புதம்.

குரு பேசிக் கொண்டிருப்பதும், சீடர்கள் பாடங்கள் கேட்டுக் கொண்டிருப்பதும் வழக்கம். இங்கே குரு மௌனமாக அமர்ந்திருக்கிறார், சீடர்கள் தான் சந்தேகங்களைக் கேட்டுக்கொண்டிருக் கின்றனர்.

**''மாசற விளங்கிய மங்கையர் ஆழ்சுடர்**
**வாடல் பூவின் இமையாத நாட்டத்து''**

**''நாற்ற உணர்வின் உருகெழு பெரியோர் என்று மருதக் காஞ்சியில் மாங்குடி மருதனார்''** குறிப்பிடுகிறார், ஆதி சங்கரரும் இந்த அற்புதக் காட்சியை,

**''சித்ரம் வடதரோர் மூலே வருந்தாச்**
**சிஷ்யா குருந்யுவா**
**குரோஸ்து மௌனம் வ்யாக்யானம்**
**சிஸ்யாஸ்து கிந்நாலம்யசர்''** என்கிறார்.

தென்திசை யமனின் திசை. யமபாசத்திலிருந்து யாரும் தப்பமுடியாது ஜீவன்கள் மரண பயத்தினால் அவதியுறாமல், தன்னை வந்தடைந்து புகழ் தேடும்போது, அவர்களது மரண பயத்தை நீக்கி அருளவே தக்ஷிணாமூர்த்திக் கடவுள் தென் திசைநோக்கி அமர்ந்திருப்பதாகக்கூறுவர்.

இந்தத் திவ்ய வடிவமே அண்ணாமலை அடிவாரத்தில் இன்றும் அமர்ந்து மோனத் தவமியற்றிக் கொண்டிருப்பதாக

அண்ணாமலையில் ஜீவ சமாதியில் உள்ள மகான் ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகள் கூறுகிறார்.

சிவபெருமான் மௌனமாக சின் முத்திரை காட்டியருளியதை மௌன உபதேசசம்பு என்று பழநித்திருப்புகழில் அருணகிரிநாதர் போற்றுகிறார்.

''சொல்லரிய நெறியை யொரு சொல்லால்

சொரூப அனுபூதி காட்டிய தக்ஷிணாமூர்த்தி''

தமிழ் நாட்டில் கும்பகோணம் அருகில் உள்ள ஆலங்குடியிலும், திருப்பத்தூர் அருகே உள்ள பட்டமங்கலத்திலும் தட்சிணாமூர்த்திக்கு தனிச் சந்நிதிகள் உண்டு. பல்வேறு சிவாலயங்களில் பல்வேறு வடிவங்களில் தக்ஷிணாமூர்த்தி பல வடிவங்களில் அருள் பாலிக்கிறார். ஆதி குருவான அவரை வழிபட்டு அருள் நலம் பெறுவது இன்றும் பக்தர்களின் நியதியாக உள்ளது.

நவராத்திரி நாயகியர்களில் அருட்சக்தியாக ஞானசக்தியாகத் திகழ்பவள் ஸ்ரீசரஸ்வதி தேவியே. நவராத்திரின் கடைசி மூன்று நாட்களில் சரஸ்வதி பூஜைசெய்வதுவழி, வழியாகவந்துள்ளமரபு.

சரஸ்வதி தேவிக்கு தமிழ் நாட்டில் சத்தனூரில் அழகிய ஆலயம் இருக்கிறது. தேவி மகாத்மியத்தில் இவ்வூரில் உள்ள சரஸ்வதிதேவியின் திவ்ய வடிவம் பற்றி கூறியிருக்கிறது.

வெண்ணிற ஆடை தரித்தவளாய், வெண்தாமரையில் வீற்றிருப்பவளாய், பத்மாசனத்தில் அமர்ந்து வலது கையில் சின் முத்திரையும், மேல் கையில் அக்ஷரமாலையும் தாங்கியிருக்கிறாள். துடியிடையும், ஜடாமுடியும், கருணைபுரியும் இரு நயனங்களும் ஞானக் கண் எனப்படும்.



ஆதி சங்கரர் இயற்றிய சௌந்தர்ய வாஹினியின் 15வது பாடல் அன்னை சரஸ்வதியின் அழகிய திருஉருவத்தை வர்ணிக்கிறது. தக்ஷிணாமூர்த்தியைப் போலவே அன்னை சரஸ்வதி தேவியும் தன்னை அடைந்தவர்களுக்கு ஞானத்தை வழங்கும் பேரருள் சக்தியாக பரிணமிக்கிறாள். கல்வியைப் பெற்று அகங்காரம் நீங்கி, ஞானத்தை அடைய வேண்டும் என்பதே சரஸ்வதியின் திரு உருவம் காட்டுகிறது.

அன்னப்பறவை பாலையும், தண்ணீரையும் தனியாகப் பிரித்து, பாலை மட்டும் அருந்தும் ஆற்றல் மிக்கது. அது போல், அம்பிகையும் தன்னை வணங்கும் அடியவர்களுக்கு நன்மையை மட்டும் கொடுத்து, தீமையை விரட்டுபவள், அது கல்வியாளர்களுக்கும், கலைஞர்களுக்கும் இருக்க வேண்டிய நற்பண்பைக் காட்டுகிறது.

செல்வத்தின் நாயகி திருமகள், மகாலக்ஷ்மியின் திருஉருவத்தைப் பார்த்தால் நமக்கு அருமையான விஷயம் புலப்படும். சமுத்திரத்தின் அலைமேல், செந்தாமரை மலரில் அவள் நின்று கொண்டிருக்கும் காட்சி உணர்த்தும் தத்துவம் என்ன?

பொதுவாக அலைபாயும் நீரில் தாமரை அசையாமல் இருக்காது. அது மிகவும் சிரம சாத்தியமான காரியம். சமுத்திர அலைகளின் மேல், தாமரைப்பூவில் நிற்பதற்கு ஒரு சமநிலை வேண்டும். சமுத்திர அலையிலும் உறுதியாகத் தாமரை நின்று, அதன் மேல் மகாலக்ஷ்மி நிலையாக நிற்கிறாள் என்றால், இது செல்வம் கிடைத்தாலும் சஞ்சலத்துக்கு ஆளாகாது இருக்க வேண்டிய நிலையைக் காட்டுகிறது.

வரும், போகும் என்ற இருவேறு நிலைகளைக் கொண்டது செல்வம். செல்வோம், செல்வோம் என்று சொல்வது போல உருண்டோடிடும் உருவமான பணம், ''காசெனும் பொருள் அது. ஆகவே, நிலையற்ற பொருளை இன்பத்துக்கு ஆதாரமாகப் பெற்று விட முடியாது. அதை உறுதி செய்து கொள்ள பேரறிவு தேவை'' அதைப் பெறுவதற்காகத்தான் அறிவுக் களஞ்சியமான ஞானக் கடவுளான சரஸ்வதி தேவியைப் பூஜிக்கிறோம்.

மனித வாழ்க்கைக்குப் பொருளும் தேவை, அருளும் வேண்டும். இவ்விரண்டையும் தரும் இரு வேறு சக்திகளே லக்ஷ்மியும் (திருமகள்), சரஸ்வதியும் (கலைமகள்)

சரஸ்வதி நமக்கு நிலையான அறிவைத் தருகிறாள். நாம் சக்தியில் தொடங்கி (துர்க்கை) செல்வத்தில் வளர்ந்து (லக்ஷ்மி) ஞானத்தில் ஆன்ம முதிர்ச்சி அடைய வேண்டும் (சரஸ்வதி) என்பதைக் குறிப்பிடும் திருவிழாவே நவராத்திரி பண்டிகையாகும். ஆக முதல் 3 நாள் துர்க்கையையும் (சக்திபெற)

அடுத்த 3 நாள் மகாலக்ஷ்மியையும் (பொருள், தனம் பெற) கடைசி 3 நாள் சரஸ்வதியையும் (ஞானம் பெற) நாம் பூஜை செய்கிறோம்.

வாக்கிலிருந்து தான் சப்தம் தோன்றுகிறது. அருள்வாக்கும் மலர்கிறது. ஞானத்தை உய்விக்கக் கூடிய மந்திரங்கள் யாவும் வாக்கிலிருந்துதான் வெளிப் படுகின்றன. ஆகவே, மந்திரங்களைச் சொல்ல பூஜை செய்ய நமக்கு ஆதாரமாக விளங்குபவள் வாக்கு தேவியான சரஸ்வதியே.

சரஸ்வதிக்கும், ஞான ஸ்வரூபியான தக்ஷிணாமூர்த்திக்கும் பல ஒற்றுமைகள் உண்டு. சரஸ்வதி ஞான வடிவானவள். ஞானம் இருக்கிற இடத்தில் அடக்கம் இருக்கும்.

எப்படி உடல் நலம் பேண மருந்தை அவசியம் உட்கொள்ள வேண்டுமோ, அப்படி பத்தியமும் அவசியம். வித்யை என்ற மருந்துதான் புறத்திற்கு நல்லது செய்யும். அகத்திற்கு நல்லது செய்ய விநயம் என்ற பத்தியமும் அவசியம். வித்யாமூர்த்திகளான இவ்விருவருமே நமக்கு வித்யை எனும் ஞானத்தை அருள்பவர்கள், இருவருமே வித்யாதேவதைகள்.

சரஸ்வதியும், தக்ஷிணாமூர்த்தியும் தம் கையில் அக்ஷரமாலை அணிந்துள்ளனர். கலைமகள் மொழி வடிவானவள். எழுத்துக்கள் 51 அவற்றை அக்ஷரங்கள் என்று சொல்வது மரபு. ஆகவே, அந்த 51 அக்ஷரங்களைக் குறிக்கும் விதத்தில் தன் கையில் 51 மணிகள் கொண்ட அக்ஷரமாலையை தரித்திருக்கிறார். அவள் வேதத்தின் உட்பொருளாவாள்.

கவிபாரதியும்.

*''வெள்ளைத் தாமரைப் பூவினில் வீற்றிருப்பாள்*
*வீணை செய்யும் ஒலியிலிருப்பாள்*
*உள்ளதாம் பொருள் வேதத்தினின் றொளிர்வாள்''*

என்று குறிப்பிடுகிறார்.

இருவருமே கைகளில் சுவடி வைத்துள்ளனர். நெற்றியில் பிறைசந்திரன் தரித்துள்ளனர். பிறை சந்திரனை, சந்திரக்கலை என்பார்கள். ''கலை. கட'' என்று அர்த்தம். அறிவும், ஞானமும் மேன்மேலும் வளர்ந்து கொண்டே போக வேண்டும்.

*''கற்றது கை மண் அளவு*
*கல்லாதது உலகளவு''* அல்லவா? வித்யைக்கு முடிவே இல்லை. சரஸ்வதி இல்லாமல் கல்வி இல்லை என்றாலும், இன்னமும் படித்துக் கொண்டே இருக்கிறாளாம். அதன் அடையாளமாக சுவடியைத் தாங்கியிருக்கிறாள்.

ஏழு வர்ணங்களில் சேராத நிறம் வெண்மை. வெண்மை பரமநிர்மலமானது. தூய்மையின் அடையாளம். தூய்மையான நிறம் அது சுத்த தத்துவ நிலையைக் குறிக்கிறது. இந்த வெள்ளையும் கூட இன்னும் நிர்மலமாக தன் வழியே ஒளி ஊடுருவிச் செல்கிற அளவுக்குத் தெளிந்துவிடுகிறபோது அது ஸ்படிகமாகிறது. தட்சிணாமூர்த்தி, சரஸ்வதி ஆகிய இருவரின் கைகளிலும் ஸ்படிகத்தால் ஆன அக்ஷரமாலை இருப்பதைக் காணலாம்.

தட்சிணா மூர்த்தியைப் போலவே சரஸ்வதிக்கும் நெற்றிக்கண் உண்டு. ஆசைபஸ்மானால் ஒழிய ஞானம் பிறக்காது. காமனை எறித்த நெற்றிக்கண் சிவனிடத்தில் உள்ளது போலவே, சரஸ்வதியிடமும் நெற்றிக்கண் இருக்கிறது. காமம் அழிந்தால் தான் ஞானம் பிறக்குமல்லவா?

இருவருமே ஜடாமகுடம் அணிந்துள்ளனர். அது காளிதாசரின் அடையாளம். இருவரும் வெள்ளை வெளேர் நிறமுடையவர்கள். வெண்ணிறம் நிர்மலமானது. தூய்மையானது, ஞானம் தூய்மையானது அல்லவா?

சரஸ்வதி தன் கையில் வீணையை வைத்துக் கொண்டிருப்பது கலைக்கு நாதவடிவான உடலால் அமைந்துள்ளது என்பதைக் காட்டுதற்கே. தட்சிணாமூர்த்தியின் கையிலும் வீணை உள்ளது.

சரஸ்வதியின் கையில் உள்ள வீணைக்கு ''கச்சமி'' என்று பெயர். வீணா தட்சிணாமூர்த்தியாக இருந்து இசைநுணுக்கங்களை உபதேசித்துள்ளார். இறைவன் தான் உருவாக்கிய கச்சமி என்ற வீணையை தனது சகோதரியான சரஸ்வதிக்குத் தந்து விட்டதாகப் புராண வரலாறு கூறுகிறது.

இப்படி ஞானகடவுளான இருவருமே நமக்கு மெய்ஞ்ஞானத்தைத்தரவல்ல அருட்தெய்வங்கள்.

குருவடிவானவனாகிய தக்ஷிணாமூர்த்தியை வியாழன்தோறும் வழிபட்டு நலம் பெறலாம்.

கலைமகள் சரஸ்வதியை என்றும் வழிபடலாம். ஆனால் சிறப்பாக நவராத்திரியன்று பூஜிப்பதை மரபாக வைத்துக் கொண்டிருக்கிறோம்.

**சரஸ்வதி திவ்யம் திருஷ்டா**
**வீணா புஸ்தக தாரிணி**
**ஹம்ஸவாஹன ஸமாயுக்தா**
**வித்யா நகரிமம**
**ப்ரதமம் பாரதீ நாம**
**த்விதியம்சரஸ்வதி**
**த்ருதீயம் ஸாரதா தேவி**
**சதுர்த்தம் ஹம்ஸ வாகினி**

என்று அவளை பிரார்த்தித்து அருள் நலம் பெறலாம்.



# வேலும் மயிலும் துணை

## கந்தர் அனுபூதி - தொடர்ச்சி

(பேராசிரியர். டாக்டர் சரஸ்வதி இராமநாதன்)

*'உலகம் யாவையும் தாமுள வாக்கலும்*
*நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா*
*அலகிலா விளையாட்டுடையார் அவர்*
*தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே''!*

என்று கம்பநாடுடைய வள்ளலும் அனைவரையும் இராமனிடம், பரம்பொருளிடம் சரணடைய அழைத்தார்.

*''உலகெலாம் உணர்ந் தோதற்(கு) அரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்''*

என்று சேக்கிழார் அருளினார். 'வணங்குவேன்' என்று பாடவில்லை.

ஆண்டவன் மட்டும் தான் எல்லோருக்கும் உரியவன், ஆண்டவனைப் பற்றிப் பாடினால், பன்மையில் பாட வேண்டும் என்பது வழக்கம். கம்பன் பாடினார், சேக்கிழார் பாடினார், அருளாளர்கள் பாடினர். எங்கே நாம் பணிய வேண்டுமோ அங்கே பணிய வேண்டும்! ஆண்டவனுடைய தாள்மலரில் பணிய வேண்டும். ஆண்டவனுக்கு எத்தனை முகங்கள் இருந்தாலும் எத்தனை கைகள் இருந்தாலும், கால்கள் மட்டும் இரண்டுதான். ஏன் இரண்டு கால் இருக்கிறது? நமக்கு இருப்பதோ இரண்டே கைகள் தான் ஆண்டவனுடைய பாதங்களை நாம் பிடிப்பதற்காகத்தான் ஆண்டவனுக்கு இரண்டு கால்கள் உள்ளன. ஆறுகால்கள் இருந்தால் எப்படி பிடிக்க முடியும். மேலும் நாம் எந்தத் தொழில் செய்தாலும் கைத்தொழில் என்றுதான் சொல்கிறோம். அதை கால்தொழில் என்றா சொல்கிறோம். எல்லாமே கைத்தொழில்தான். தன் மானத்தைத் தன் கையால் காப்பாற்றிக் கொள்ள முடியாத நிலை ஏற்பட்டபின் தான் திரௌபதி கண்ணனை அழைத்தாள்.

கண்ணனுடைய திருவருள் கிடைத்தது. கஜேந்திரனே ஆபத்திலிருக்கும் போது இனி என்னால் என்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது என்று ஆதி மூலமே என்று அலறியபோது தான் ஆண்டவன் ஓடிவந்து அருள் புரிகிறான். அதேபோல் ஆறுமுகப் பெருமானிடம் நாம் அடைக்கலம் சரண் என்று சென்றால் நமக்கு அருள் புரிவான், நம்முடன் வருவான்.

இராமாயணத்தில் இந்த சரணாகதி தத்துவத்தை உலகத்திற்குக் காட்டியவன் பரதன். பசியாய் இருக்கிறது சாப்பிடுகிறோம். சாப்பிட்ட பின் பசி ஆறியது. யாருக்கு நன்றி? சாதத்திற்கும் அவியலுக்கும், கூட்டுக்கும் சமையல்காரனுக்கும் என்றா நன்றி சொல்கிறோம். சாப்பாடு போட்டவருக்கு நன்றி. அதுபோல் ஆண்டவனுக்கு நன்றி சொல்ல வேண்டும் என்றால், இராமருடைய பாதுகையின் மகிமையை உலகத்திற்கு உணர்த்திய பரதனுக்கு நன்றி சொல்ல வேண்டும். பூரண சரணாகதி அங்கே தெரிகிறது. பாற்கடலில் சீதேவியின் மடியில் தலை வைத்து, பூதேவி கால் பிடிக்க நாராயணன் படுத்திருந்தான். நாராயணன் எழுந்திருந்து சென்றான். கொஞ்சதூரம் சென்று திரும்பி வந்தான். சீதேவி கேட்டாள் 'எங்கே சென்றீர்?' அதற்கு நாராயணன் சொன்னார் ''பூலோகத்தில் ஒருவன் என்னைக் கூப்பிட்டான். நான் அங்கே உதவி செய்யப் போனேன்.

ஒரு வண்ணான் துணி துவைத்து உலர்த்திக் கொண்டு இருந்தான். அது ஒருவர் காலில் மிதிபட்டு அழுக்காகி விட்டது. வண்ணான் கல்லெடுத்து அடிக்க வந்தான் அந்த நேரத்தில் 'நாராயணா' என்று கூப்பிட்டான். அவனுக்கு உதவப் போனேன் என்றார். யார் பக்தி இல்லாதவனோ அவனால் கடவுளைத் தூக்க முடியாது. ஆஞ்சநேயர் எப்படி இலட்சுமணனை தூக்கி சென்றார்? தாய்க்குரங்கு குட்டிக்குரங்கை தூக்கி செல்வது போல் தூக்கிச் சென்றான். அதாவது இலட்சுமணன் ஆஞ்சசேயரைப் பிடித்துக் கொண்டான். அப்படி நாம் ஆனைமுகன் பாதத்தைப் பற்றுவோம். எதற்கு? முருகனைப் பற்றிய பாமாலை சிறக்கத்தான்.

பயபக்தி மிக அவசியம் சம்பிரதாயப்படி சொல்ல வேண்டுமானால் ஆண்டவனிடத்தில் ''பயபக்தியோடு'' இருக்கவேண்டும். ஆண்டவனைப் பார்த்து பயந்தால் பக்தி வராது. அப்பாவிடம் பையன் பயந்தால் நிச்சயம் பக்தி வராது. அப்பா எப்போது ஒழிவான் என்று நினைப்பான். ஆண்டவனை நோக்கி பக்தி கொள்ள வேண்டும். நாம் தப்பு, தவறு செய்து விடுவோமா என்று பயந்து எல்லா வற்றிக்கும் மேலேயுள்ள ஆண்டவனிடத்தில் பக்தி செலுத்துகிறோம். மனத்தால் தவறு செய்வதைக் குறைக்கத் தான் தெய்வபக்தி. உடம்பாலோ, நடத்தையாலோ தவறு பண்ணினால் தண்டனை உண்டு. சாட்சி உண்டு. மனத்தால் தவறு செய்தால் சாட்சி, மனச்சாட்சி என்ற ஆண்டவன்தான். மனது, செயல் சுத்தமாக இருக்க வேண்டும். அதற்குத்தான் தெய்வபக்தி என்றும், பயபக்தி என்றும் பெயர். அகங்காரம் போக வேண்டும். மனத்திற்குச் சாட்சி அதுதான். பெரியவர்கள் பயந்து வாழ்ந்தார்கள். திருக்குறளிலே ஆணுக்கும் நாணம் வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

பெண்ணுக்கும் நாணம் வேண்டும். பெண்ணுக்கும் மனதில் வெட்கம் இருந்தால் வேறு ஆபரணம் வேண்டாம். தப்பு பண்ணக் கூடாது. தப்பு செய்ய அஞ்சவும், நாணவும் வேண்டும். பழிபாவங்களுக்கு நாண வேண்டும். அடுத்து அன்பு பக்திக்கு இன்றியமையாதது. அன்பு உள்ளத்தை உருக்கும், கல்லையும் கனியாக்குவது அன்பு. பதவி, பணம் கூடியவர்களிடம் காட்டும் நட்பு அன்பு அல்ல, கீழே உள்ளவர்களிடம், எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்த வேண்டும். இதுதான் ஜீவகாருண்யம். விருப்பு, வெறுப்பு வாசனை சேர்ந்து மனது கல்லாக இருக்கும். சில பேரைப் பார்த்ததும் விருப்பு, சிலரை பார்த்ததும் வெறுப்பு, இதற்கு காரணம் வாசனை. இது பிறவி தோறும் வரும். விருப்பு, வெறுப்பு இல்லாதவன் ஞானி. ஞானி வாழ்க்கையிலே விருப்பு வெறுப்பு கிடையாது. ஒருவன் வளர்த்த பூனை, எலியைக் கொன்றதும் விருப்பு வருகிறது. அவன் வளர்த்த கிளியையே அது தின்றது, வருவது வெறுப்பு. தெருக்குருவியைத் தின்றால் அதுவிருப்பு வெறுப்பில்லை. சமநிலை, இந்த நிலை எல்லா இடத்தும் வருமானால் பக்குவம்.

ஐம்பத்தொரு பாட்டையும் சொல்லி முருகப் பெருமான் தரிசனம் பெறவேண்டும். அமைதியை, மனநிறைவை அவன் கொடுப்பான். பக்தி, பக்திக்காகவே இருக்க வேண்டும். முருகப் பெருமான் திருவடியை அனுபூதியிலுள்ள ஐம்பத்தொரு பாட்டையும் சொல்லிப் பற்ற வேண்டும்.

இனி அனுபூதிப் பாடல்களின் விளக்கம் தொடரும்.



கனமான தராசுத்தட்டு கீழே போகிறது, இலேசான தட்டோ மேலே செல்கின்றது, அதுபோல உயர்குணமும் சாமர்த்தியமும் உள்ள மனிதன் எப்போதும் பணிவாயும் பவ்யமாயும் இருக்கிறான். முட்டாளோ வீண் அகம்பாவத்தால் கர்வம் படைத்தவனாக இருக்கிறான்.

- ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர்

# பெரும்செல்வம் நெருப்பாக

திரு. டி.எஸ்.இராமசாமி

''கொள்ளென்றுகிளர்ந்தெழுந்த பெருஞ்
செல்வம் நெருப்பாக
கொள்ளென்று தமமூடும் இவையென்னவு
லகியற்கை
வள்ளலேமணிவண்ணா உனகழற்கேவரும்
பரிசு
வள்ளல் செய்தடியேனை உனதருளால்
வாங்காயே''
-திருவாய்மொழி (4-9-4)

''நெருப்பாக'' என்றால் நெருப்பைப் போன்று அடியோடு அழிய என்பது பொருள், அல்லது தன்னுடைய அழிவுக்குக் காரணமான என்றும் கூறலாம்.

தேவைக்கு மிஞ்சி கொள்ள ஆசைப்படும் செல்வத்தைத்தான் ''பெருஞ்செல்வம்'' என்று கூறுகிறார் ஆழ்வார்.

மனிதன் அழிவதற்குக் காரணமான பெருஞ்செல்வத்தை மீண்டும் மீண்டும் விரும்புதல் இயல்பு என்னும்படி இருக்கிற இதற்குக் காரணம் யாதோ, இது கண்டு என்னால் பொறுக்க முடியவில்லையே, முதலில், அடியேனை இவைகளிடமிருந்து மீட்க வேண்டும் என்கிறார்.

செல்வம் அழிவுக்கும் காரணமாதல் எப்படி?

''கொள், கொள்'' என்று ''மொண்டெழு பானை'' (ஏற்றப் பானை) போலக் கிளர்ந்து வருகிற எல்லையில்லாத செல்வம், நெருப்பைப் போன்று ஒருவன் அடியோடு அழிவதற்குக் காரணமாகி விடுகிறது. எப்படி யென்றால், ''இவன் வாழ்கிறான்'' என்கிற இது கேட்டு பொறுக்க முடியாமல்தானே பிறர் இவனைக் ''கொள் கொள்'' என்று தூண்டி அறிவின்மையினால் மூடப்பட்டவனாய் பேராசையினாலே, அழிவுக்குக் காரணமான அச்செல்வத்தை ஆசையுடன் பெறுகிறான்.

நெருப்புக்கு மற்றொரு பெயர் **''சேர்ந்தாரைக் கொல்லி''** அதைப் போன்றே, செல்வமும், தான் சேர்ந்திருக்கிற மனிதனையே அழித்துவிடுகிறது.

''where money accumulates. man decays'' என்றார் ஓர் ஆங்கில அறிஞர். பெரும்செல்வம் அழிவின் காரணமென்று தெரிந்தும் மீண்டும், மீண்டும் அச்செல்வத்தை அவன் விரும்புவதன் காரணம், அவன் தமோ குணத்தினால் மூடப்படுவதேயாகும்.

'மஹாபாரதத்தில் மஹாஞானியான - மஹா வீரனான - பீஷ்மர் இறந்த பின்னும் துரோணாசாரியர் இறந்த பின்னும், கர்ணன் மடிந்த பின்னும், சல்லியன் ஒருவனே பாண்டவர்களை வென்று விடுவான் என்ற துரியோதனனின் துர் ஆசைஅதிகரித்தது'' - மஹாபாரதம் (சல்லிய பருவம்)

''கொள் என்று கிளர்ந்து எழுந்த பெரும் செல்வம் நெருப்பாகக் கொள் என்று தமம் மூடும்'' என்கிற இந்த விஷயத்தைக் கண்டு ஆழ்வார், ''இவையென்ன உலகியற்கை'' என்று வருத்தம் கலந்த வியப்புடன் பாசுரம் அருளுகிறார்.

ஆழ்வார், ''பெரும் செல்வம் நெருப்பாக'' என்று அருளுகிறாரே ஒழிய ''செல்வம் நெருப்பாக'' என்று கூறவில்லை.

ஏனெனில், 'அர்த்தம் (திரவியம்), காமம், தர்மம், மோக்ஷம்' ஆகிய நான்கும் ''புருஷார்த்தங்கள்தான்' என்று கூறுகிறது நம் சாஸ்திரம்.

'மன்னுமறம் பொருள் இன்பம் வீடு என்று உலகில் நன்னெறி மேம்பட்டன நான்கன்றே' என்று பெரிய திருமடலும்,

''சேம நல்வீடும் பொருளும், தர்மமும், சீரிய நற்காமமும் என்றிவை நான்கென்பர்'' என்று இராமாநுச நூற்றந்தாதியும் விளக்குகின்றன.

'அர்த்தம்' என்றால் ''திரவியம்'' அல்லது 'தனம்' என்பது பொருள்.

பகவத் பாகவத கைங்கர்யங்களுக்காகச் செலவு செய்யப்படும் தனத்தை ஈட்டல் அவசியமே! அந்த தனத்தை தவறான வழியில் செலவு செய்யும் போதுதான் அது நெருப்பாகின்றது.

ஒரு கூரிய கத்தியை காய்கறி நறுக்கவும் பயன்படுத்தலாம். வன்முறைச் செயலுக்கும்

பயன்படுத்தலாம்.

அதாவது 'அர்த்தம்' (தனம்) நல்ல விஷயங்களுக்காகச் செலவு செய்யப்பட்டால் அர்த்தமுள்ள வாழ்க்கை கிடைக்கிறது.

தொண்டரடிப் பொடி ஆழ்வார் திருமாலையில்,

**''தவத்துளார் தம்மிலல்லேன் தனம் படைத்தாரி லல்லேன்''** என்று பாடியுள்ளார். ஆழ்வார் 'பணம் ஈட்டவிலையே என்று ஏங்குவது சரியா- அவருக்கு வைராக்யக் குறைவு ஏற்படலாமா?

அவருக்கு முன்பிருந்த பெரியாழ்வார், பாண்டிய மன்னனிடம் பெற்ற பெருஞ் செல்வத்தைக் கொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் கோபுரப் பிரகாரம் நிர்மாணித்தார்.

திருமங்கையாழ்வார் பகவத் கைங்கர்யத்துக்காகவும், பாகவத ததியாராதனாதிகளுக்கும் பல வழிகளில் பணம் ஈட்டி அவ்வளவையும் செலவு செய்தார்.

பழங்காலத்தில் ஜாநச்ருதி முதலானோர் ரைக்வர் போன்ற ஆசார்யர்களுக்கு நிறைய பொருள் கொடுத்து ப்ரும்ம வித்யைகளைக் கற்றனர் என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. ஆகவேதான், கைங்கர்ய ருசி மேலிட்டதாலே, தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் ''தனம் படைத்தாரில் அல்லேன்'' என்று குறைப்பட்டுக் கொண்டாரே தவிர, இதில் அவருடைய தகுதியின்மை ஒன்றுமில்லை..

ஆழ்வாரும் மற்றோரிடத்திலே,

''பொருள்கையுண்டாய்ச் செல்லக்காணில்
போற்றியென்றேற்றெழுவர்
இருள்கொள் துன்பத்தின்மைகாணில்
என்னேயென் பாருமில்லை'' *- (9-1-3)*

என்று அருளியுள்ளார்.

''நாம் பிறக்கும்போது கையிலே ஒருகாசு கொண்டு வந்திலோம், இறக்கும்போது அரை ஞாணையும் அறுத்துக் கொண்டுதான் நம்மைப் போகவிடுகிறார்கள். ஏதோ இடையில் சில தாண்டவங்கள் நடக்கின்றன. எம்பெருமான் நம்மைக் கூடிய மட்டிலும் நல்ல ஸ்திதியில் வைத்திருக்கிறான், நாமும் நமரும் உண்டு மிகுந்ததை யதாசக்தி ஸத்பாத்ரங்களிலே விநியோகித்துக் களிப்போம்'' என்று காஞ்சி ஸ்வாமி அவர்கள் சொன்னதை நினைவில் கொண்டு ''பெரும்செல்வம் நெருப்பாக'' மாறாமல் நம்மைக் காத்துக் கொள்வோமாக.

(திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் - புருஷோத்தம நாயுடு , ''உபந்யாஸக ஹஸ்த பூஷணம்'' ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டது.)

## இம்மாதப் பாராயணப் பாசுரம்

நெய்யிடை நல்லதோர்சோறும் நியதமுமத்தாணிச் சேவகமும்
கையடைக் காயுங் கழுத்துக்குப் பூணொடு காதுக்குக்குண்டலமும்
மெய்யிட நல்லதோர் சாந்தமுந் தந்து என்னை வெள்ளுயிராக்கவல்ல
டையுடை நாகப் பகைக் கொடியானுக்குப் பல்லாண்டு கூறுவனே

பெரியாழ்வார் திருமொழி - திருப்பல்லாண்டு

# பதில்



திருக்கோயில் அமைப்புக்கும் ஆறுகாலப் பூசைமுறைக்கும் உள்ள தொடர்பு என்ன?

தில்லை, திருவரங்கம் போன்ற திருக்கோயில்களில் இன்றும் ஆறுகாலப் பூசைநடைபெற்றுவருவது கண்கூடு.

நாளொன்று ஆறுகாலம், எட்டுக்காலம் என்ற இருவகைகளில் திருக்கோயிற் பூசைமுறைகள் நடைபெற்று வந்தன என்பது மரபியல் முறையால் அமைந்த வரலாற்று முறை.

ஆறுகாலம், எட்டுகாலம் பூசைமுறைகளுக்கு மெய்ப்பொருள் - தத்துவவிளக்கம் அமைக்கப் பெற்றது.

தனிமனித ஆன்ம முன்னேற்றத்துக்குச் செய்யப் பெறும் பூசைஆத்மார்த்தம். பிறர் நலத்துக்காக உலக நலத்துக்காகத் திருக்கோயில் திருமேனிகளுக்குச் செய்யப் பெறும் பூசைபரார்த்தம் எனப்பெறும்.

ஆத்மார்த்தப் பூசைசெய்யாதவர் பரார்த்தப் பூசைசெய்தற்கு உரியல்லர். ஆனால், இன்று திருக்கோயில்களில் ஆத்மார்த்தம் செய்யாத பலர் பரார்த்தம் செய்வது நாட்டிற்குக் கேடு பயக்கும் என்பதை உணர்தல் இல்லை. இதனைப் ''பேர்கொண்ட பூசை'' எனத் தொடங்கும் திருமந்திரப் பாடல் இடித்துரைப்பதைக் காணலாம்.

ஆத்மார்த்தத்தில் அட்டபுஷ்பம் சாத்தி வழிபடல் வேண்டும். கொல்லாமை, ஐம்பொறி அடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு என்ற எட்டுக்குணங்களால் வழிபடல் வேண்டும் என்பது இலக்கணம்.

பரார்த்தத்தில் இறைவன் அட்ட மூர்த்தியாக உள்ளான் (நிலம், நீர், தீ, வளி, வான், சூரியன், சந்திரன், ஆன்மாவின் உள்ளிருந்து இயக்குபவன்) எனக் கொண்டு அவனைப் பூசித்து வழிபடல் வேண்டும்.

இவ்வகையில் எட்டுகாலப் பூசைமுறையானது காலத்துடன் இயைந்து இவ்வெட்டினையும் இயக்கி உலகத்தை வளப்படுத்தவேண்டும் என்ற வகையில் அமைக்கப் பெற்றது. இதுவே வழிபாட்டு முறையில் அமைந்த பழைமையான மரபு.

திருக்கோயில் பலவாகக் கட்டப் பெற்ற பின்னர் திருக்கோயிலின் அமைப்பை அடிப்படையாகக் கொண்டு ஆறுகாலப் பூசைமுறை அமைந்தது. திருக்கோயில் ஆறாதார அமைப்பை அடிப்படையாகக் கொண்டது.

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களின் வெளிப்புற அமைப்பு எனக் கொண்டு, ஆத்மார்த்தத்தில் ஆறாதார வழிபாட்டைச் செய்த ஒருவன் பரார்த்தத்திலும் ஆறாதார அடிப்படையில் பூசைசெய்தல் வேண்டும் என அமைக்கப் பெற்ற முறையும் தமிழகத் திருக்கோயில்களில் மரபு முறையாக கடைப்பிடிக்கப் பெற்று வருகிறது.

நன்றி - பேராசிரியர்
முனைவர்.வை.இரத்தினசபாபதி

## ரத்னமணி மாலை

ஆதிசங்கரர் சமஸ்கிருதத்தில் ''ப்ரச்னோத்ர ரத்ன மாலிகா'' என்ற நூல் இயற்றியிருக்கிறார். தமிழில் அதற்கு ரத்ன மணி மாலை என்று பெயராகும் அதிலிருந்த சில ஆன்மீக அமுதத்துளிகள்.

எது தீமையில் முடிவது? - அகந்தை

எது மகிழ்ச்சியைத் தரவல்லது? -நல்லவர்களின்நட்பு

துயரங்கள் அனைத்தையும் அழிக்கவல்லவர் யார்? -அனைத்தையும்துறக்க வல்லவர்

மரணத்தைக் காட்டிலும் கொடியது எது? - வஞ்சகம்

விலை மதிக்க முடியாதது எது? - தேவைப்படும் நேரத்தில் செய்யப்படும் உதவி

மனிதன் நெஞ்சில் முள்ளாகக் குத்துவது எது? - யாருக்கும் தெரியாமல்மறைமுகமாக செய்த பாவச்செயல்

முயற்சி செய்து பெற வேண்டியவை எவை - கல்வி, தகுந்த மருந்து, ஒழுக்கத்திற்காகப் பெரும் பரிசு.

எவைகளை அலட்சியம் செய்யவேண்டும்? - தீயோர், மாற்றானின் மனைவி, பிறர்உடைமை.

யார்முன்னால் தெய்வங்கள் பணிந்து நிற்கும்? - ஜீவகாருண்யம் உள்ளவர்களிடம்

வாழுகின்ற உயிர்களை யார் யாரால் கட்டுப்படுத்த முடியும்? - உண்மையைப் பேசுபவர்கள், இனிமையாகப் பேசுபவர்கள், அடக்கத்துடன் இருப்பவர்கள்.

த.சத்தியநாராயணன் -
அயன்புரம்

# திருமுறைச் சிறப்புகள்

திருமுறைக் காவலர்
கயிலைச்செல்வர் சிவத்திரு ப.மூக்கப்பிள்ளை
திருச்சிராப்பள்ளி.

''திருமுறையே சைவநெறிக் கருவூலம்
தென் தமிழின் தேன் பாலாகும்,
திருமுறையே கயிலையின்கண்
சிவபெருமான்
செவிமடுத்த செந்தமிழ் வேதம்,
திருமுறையே நடராசன் கரம் வருந்த
எழுதிய அருள் தெய்வ நூலாம்,
திருமுறையே சொக்கேசன் மதிமலிவாய்
மலர்ந்தருளும் சிறப்பிற்றாமால்''

- சிதம்பரத் தலத் தனிப்பாடல்.

திருமுறைகள்

திருஞான சம்பந்தர் முதலாகத் தெய்வச்சேக்கிழார் வரையுள்ள இருபத்தேழு அருளாசிரியர்கள் இயற்றி அருளிய பன்னிரு திருமுறைகளும் செந்தமிழ் மறைகள் ஆகும். தமிழ் நாட்டில் தமிழ் மொழியில் இயற்றியுதவப் பெற்ற, தேனினும் இனிய திருக்கடைக்காப்பு, தேவாரம், திருப்பாட்டு, திருவாசகம், திருவிசைப்பா, திருமந்திரம், திருநூல்கள் திரட்டு, திருத்தொண்டர் மாக்கதை ஆகிய திருமுறைகள் இந்தியா முழுவதும், உலகம் முழுவதும் பரவி மக்களை அருள்நெறியில் செலுத்தி வருகின்றன.

திருமுறைத் தொகுப்பு·

முதலாம் ஆதித்த சோழனுக்குத் திருமுறைகண்ட சோழன் என்னும் சிறப்புப் பெயர் வழங்கும், அம்மன்னர்பிரான், திருநாரையூர் நம்பியாண்டர் நம்பியின் உதவியால், திருமுறைகளைத் தில்லைத் திருக்கோயிற்தலத்தில் இருந்து, தேடி எடுத்துத், தமிழ் உலகிற்கு முதல் ஏழு திருமுறைகளைத் தந்தான். பின்னர் மாணிக்கவாசகரின் திருவாசகம் எட்டாம் திருமுறையாகச் சேர்க்கப் பெற்றது. அதன் பின்னர், பாடல் பெற்ற



ஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரமூர்த்தி மாணிக்கவாசகர்

தலத்தும், பாடல்பெறாப் புகழ்த்தலத்தும், ஒன்பதின்மரால் அருளிச் செய்யப் பெற்ற இசைப்பாக்கள், திருவிசைப்பா, திருப் பல்லாண்டு தொகுக்கப் பெற்று, அவை ஒன்பதாம் திருமுறையாக சேர்க்கப் பெற்றன. தொடர்ந்து, திருமூலதேவர் அருளிச் செய்த ''செந்தமிழ் ஆகமமாம்'' திருமந்திரம் பத்தாம் திருமுறையாக்கப் பெற்றது. இறையனார் முதலாக நம்பியாண்டார் நம்பி ஈறாகப் பன்னிருவர் பாடிய நாற்பத்தி ஒரு, பிரபந்த நூல்கள் அடைவு செய்யப் பெற்று, பதினொன்றாம் திருமுறையாக்கப் பெற்றது. தெய்வச் சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் மாக்கதை, பன்னிரண்டாம் திருமுறையாகத் தொகுக்கப் பெற்றது.

திருமுறைகள் அனைத்தும் சிவபரம் பொருளின் வாய் மொழியாகும். ''வண்டமிழால், எழுதுமறை மொழிந்த பிரான்'' என்கிறது பெரியபுராணம். அவை, இறைவனின் அருள்மொழிகள் ஆகும். இதை ''எனதுரை தனதுரையாக'' எனவரும், திருஞான சம்பந்தர் திருவாக்கால் அறியலாம்.

ஓம் என்பது மந்திர வடிவம். முதல் திருமுறை அருளிய, திருஞானசம்பந்தர் ''தோடுடைய'' என்று திருப்பதிகம் தொடங்கினார். த்+ஓ=தோ. ஒற்று நீங்கிய பின் இருப்பது - ஓ- என்பது. தெய்வச் சேக்கிழார், தம் திருத்தொண்டர் புராணத்தை, ''உலகெலாம்'' என்று நிறைவு செய்துள்ளார். முதல் திருமுறை ஓ- என்று தொடங்குகிறது. பன்னிரண்டாம் திருமுறை- ம் என்று முடிகிறது. இந்த இரண்டு எழுத்தும் சேர்ந்து ஓம் என்னும் மந்திரம் ஆகிறது. எனவே, பன்னிருதிருமுறைகளும் 'ஓம்' என்னும் மந்திர வடிவாகும்.

திருமுறைகள் மந்திரங்களே

பன்னிரு திருமுறைகளில் உள்ள ஒவ்வொரு சொல்லும் மந்திர ஆற்றல் பெற்றவை. இறைவன் மந்திர வடிவமாக உள்ளான். திருமுறைகள் மந்திரங்கள் என்னும் உண்மையைத் திருமுறை கண்ட புராணத்தில்,

''மந்திரங்கள் எழுகோடி ஆதலினால், மன்னுமவர்
இந்தவகை, திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்து
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்றும் ஆதலினால்
அந்தமுறை நான்கினொடு முறை பதினொன்று ஆக்கினார்''

என்று உமாபதி சிவம் அவர்கள் தெளிவு செய்துள்ளமையை அறியலாம்.

திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதி கங்களைத் திருக்கடைக்காப்பு என்பர். திருநாவுக்கரசர் அருளியவைகளைத் தேவாரம் என்பர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியவைகளைத் திருப்பாட்டு என்பர். இவை காரணப் பெயர்கள் இம்மூவரும் அருளிய பாடற்தொகுப்பு நூலுக்கு அடங்கள் முறை என்ற பெயரும் வழங்கப்பட்டு வருகிறது.

ஆனால், முதல் மூவர் அருளிய பதிகங்கள் அனைத்தையும், இரட்டைப் புலவர்கள், தாம் இயற்றியுதவிய, ஏகம்பரநாதர் உலாவில் முதன் முதலில், தேவாரம் என்றே அழைத்து மகிழ்ந்துள்ளனர்.

''மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரம் செய்த திருப்பாட்டாகும்''

என்பது அவ்வுலாவில் வரும் தொடர்கள் ஆகும்.

மூவர் திருப்பதிகங்கள் அனைத்தையும் தேவாரம் என்னும் பெயரால் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டு வழங்கியவர், செவ்வந்திப் புராணம் அருளிய சைவ எல்லப்ப நாவலர் ஆவார். அவர் தான் இயற்றிய திரு அருணைக் கலம்பகத்தில்,

''நான்மறைச் செம்பொருள் வாய்மை வைத்த
சீர் திருத் தேவாரமும், திருவாசகமும்,
உய்வைத் தரச் செய்த நால்வர் பொற்றாள்
எம் உயிர்த் துணையே''

என்று குறிப்பிட்டுள்ளார்.

திருமுறைச் சிறப்புகள்

திருமுறைப் பாடல்கள், இறைவனின் திருவருளைப் போற்றியவை. இறைவன் திருவருளால் இயற்றப் பெற்றவை. அவைகளை அருளியவர்கள் அணைந்தோர்

எனப்பெறும் சீவன் முத்தர்கள். அவர்கள் உலகில் வாழ்ந்தாலும். தெய்வத் தன்மை உடையவர்கள். திருமுறைப் பாடல்கள் மனம் கரைக்கும். மலங்கெடுக்கும், இறைவன் திருவருள் நாட்டத்தைப் பெற்றுத்தரும், இறந்தாரை எழுப்பும், நஞ்சு முறிக்கும், நோய் அழிக்கும், ஓடம் செலுத்தும், மறைக்கதவம் திறக்கும், அனலில் அழியாது, நீரில் ஏடு எதிர் ஏறும், வெப்பு நோய் நீக்கும், கூன் நிமிர்க்கும், வானாளச் செய்யும், வளம் பல வழங்கும் வாரமாக வழிபாடு செய்பவர் ஞாலம் ஆளும் சிறப்பு பெறுவர்.

திருமுறைகள் சைவநன் மக்களின் திருமந்திரங்கள் நாளும், ஓதி உய்வு பெறுவோம். திருவருள் நலமும் பெறுவோம்.

சிவ சிவ

## ஆன்மிக வாழ்வின் ரகசியம்



ஆன்மிக வாழ்வின் ரகசியம் என்ன? 'ஒரு கடிகாரம் டிக், டிக் என்று தொடர்ந்து ஒலிப்பதைப் போல இறைவனின் திருநாமத்தை இடைவிடாமல் ஜபித்து வா. வாழ்வின் ரகசியம் புரியும். அது, உனக்கு அனைத்தையும் நல்கும். அதற்கு மேல் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை'

அன்னை சாரதாதேவி

# இடர் களைவாய் இறைவா

வினையின் பயனாய் ஆன்மாக்களுக்கு ஏற்படும் அல்லல்களை களைவது இறைவன் அருள். அவன் அருளின்றி இடர்கள் அகலா. அருள் கிட்டின் பகலவன் கண்ட பனி போல் விலகும் என்பது நிச்சயம்.

அடியார்களுக்கு ஏற்படும் இடர்களைக் களையும் இறைவனைப் போற்றித் துதிக்க திருமுறைகளில் மூவர் தேவாரங்களில் நான்கு இடர்களையும் பதிகங்கள் உள்ளன. அத்தகைய பதிகங்கள் திருமறைக்காட்டிலிருந்து மதுரைக்கு மங்கையர்க்கரசியின் வேண்டுதல்படி சைவம் தழைத்தோங்கவும், சமணம் விலகவும் புறப்பட்ட திருஞானசம்பந்தரின் பயணத்தின் முன்பு ''நாளும், கோளும்'' சரியில்லையென்று கூறிய அப்பர் பெருமானுக்கு பதிலுரையாக வெளியிட்ட பதிகம் சம்பந்தரின் ''கோளறு பதிகமாகும்''

திருநெடுங்களத்தில் அருளிய ''மறையுடையாய் தோலுடையாய்'' என்ற பதிகமும், ஆவடுதுறையில் அருளிய ''இடரினும் தளரினும்'' எனும் பதிகமும், வடதிருமுல்லைவாயிலில் சுந்தரரின் திருப்பாட்டாக வெளியிடப்பட்ட ''திருவும்'' என்ற பதிகமும் என்பர் சைவ நல்லுலகத்தினர். திருநெடுங்களத்தில் அருளிச் செய்த முதலாம் திருமுறையில் ''மறையுடையாய்'' எனத் தொடங்கும் பதிகத்தினைத் தொடர்ந்து

இவ்விதழில் ''கூறுகொண்டாய் '' எனத் தொடங்கும் பதிகத்தினைக் காண்போம்.

''கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக் கூட்டியோர் வெங்கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமா னணிந்த
நீறுகொண்டா ரிடர்களையாய் நெடுங்களமேயவனே''

திருநெடுங்களத்தை விரும்பிக் கோயில் கொண்டுள்ள பிரானே! மாது ஒரு பாகம் உடையவனே ! பகைவர்களுடையபுரங்கள் மூன்றையும் திருமால், அக்னி, வாயு மூன்றையும் கூட்டிய ஓர் கணையினால் எரித்த பெரியோனே; கொடியின் மேல் எருதினையுடையவனே! எம்பெருமானாகிய நீஅணிந்ததிருநீற்றினைப் பூசிக்கொள்ளத்தக்க சந்தனம் இதுவேயென்று கொண்டிருப்பவர்களாகிய அடியார்களின் இடர்களைக் களைந்து அருள் புரிவாயாக.

நம் இடர்கள் களைய ஞானசம்பந்தர் அருளிச் செய்துள்ள முதலாம் திருமுறையில் வரும் இப்பாடலை இம்மாத பாராயணப் பகுதியாகக் கொண்டு பாராயணம் செய்து பலன் பெறுவோமாக.

# திருமந்திர உபதேசம்

திருமந்திரச்செல்வர் டி.வி. வெங்கட்ராமன், இ.ஆ.ப. (ஓய்வு)


திருமூலதேவ நாயனார்

''மலங் களைந்தா மென மாற்றி
தலங் களைந்தானற் சதாசிவமான
புலங்களைந்தான் அப்பொதுவினில் நந்தி
நலங்களைந்தானுள் நயந்தான் அறிந்தே''

(திருமந்திரம் 118)

ஐந்து மலங்களில் கன்மம் ஒன்று. அதுபற்றி சென்ற இதழில் சிந்திக்கத் தொடங்கினோம்.

''பதியினைப் போல் பசுபாசம் அநாதி'' என்றார் திருமூலர். ஆகவே பாசத்தின் ஒரு கூறான கன்மம் அநாதிப்பொருளாகும். மலங்களில் ஆணவம் சகசம் அல்லது இயற்கை மலமென்றும், மாயை, பின்னர் வந்தது என்றும் விளக்கப்படுகின்றன. ஆணவம் ஆன்மாவின் அறிவை மறைக்கும் என்றும், மாயை, கன்மம் ஆன்மாவின் அறிவை விளக்கம்பெற உதவும் என்பதும், சைவ சித்தாந்தத்தின் முக்கிய கருத்தாகும்.

இறைவன் உலகத்தோடு தொடர்பு வைத்துக் கொள்வதற்காக வைத்து கொள்ளும் முறை உயிர்கள் செய்யும் வினைகளை நல்வினை, தீவினை என்று பகுத்து, அவற்றிற்கேற்ப அவைகளைச் செலுத்துவது என்று சிவஞான போதம் முதல் சாத்திர நூல்கள் விளக்குகின்றன. வினைகளுக்கு ஈடாக இறைவன் செயல்படுகிறான். இறைவனுக்கு வினை ஒரு கருவியாக அமைகிறது.

முற்பிறப்புகளில் செய்யப்பட்டு கிடக்கும் பழவினைகள் சஞ்சிதம் எனப்படும். அந்தத் தொகுப்பிலிருந்து, இறைவன் இப்பிறவிக்கென உயிரோடு சேர்க்கின்ற வினைகள் பிராப்தம் எனப்படும். இப்பிறப்பில், இந்த வினைகளை அனுபவிக்கும்போது மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் நாம் செய்யும் வினைகள் ஆகாமியம் எனப்படும்.

பிறப்பு எடுக்கும் ஆன்மாக்கள் இறைவன் வைத்த வழியில் நல்வின்னைகளைச் செய்து ஒழுக்கங்களை மேற்கொள்ளும்போது, இறைவன் இம்மை, மறுமை இன்பங்களை வழங்குகின்றான். தன்முனைப்போடு நிற்பவர்களுக்கும், தீவினை செய்பவர்களுக்கும் இறைவன் உடல் துன்பத்தையும், பிறவித் துன்பத்தையும் தந்தருளுகிறான்.

முன்னம் பிறவிகளில் நாம் செய்த வினைகளில் இறைவன் செய்கையால் இப்பிறவியில் நாம் சிலவற்றை அனுபவிக்கும்போது கூடவே, புதிய வினைகளையும் செய்கிறோம். நல்வினையின் பயனாக இன்பத்தை அனுபவிக்கும்போது, அதில் விருப்பம் கொண்டு மேலும், மேலும் அதுபோன்ற இன்பத்தையே நாடுகிறோம். துன்பம் வரும்போது அதை வெறுத்து, பிறர் மீது பொறுப்பைச் சுமத்தி, தவறான வழிகளிலும் அத்துன்பத்தை நீக்கிக்கொள்ள முயல்கிறோம். இவ்வாறு நாம் செய்யும் ஒவ்வொரு செய்கையும், புதிய வினையை உருவாக்குகின்றது,

வினை அறிவற்றது. இறைவனே, வினையின் பயனை வினை செய்தவர் அனுபவிப்பதற்காக, உயிரை உடலில் பொருத்தி, கூட்டுவிக்கவும் செய்கிறான். இரும்பை காந்தத்தின் அருகில்கொண்டு போகும்போதே, காந்தம், இரும்பை ஈர்த்துக் கொள்ளும். அதுபோல இறைவன் உயிர்களிடத்து வினைப் பயனை கொண்டு சேர்ப்பிக்க உயிர்கள் அவற்றை அனுபவித்துக் கழிக்கும்.

உயிர் அறிவுடைய பொருளாக இருந்தாலும், அது ஆணவமலத்தால் கட்டுண்டு, அறியாமையால் மூடப்பெற்றிருப்பதால், உயிருக்கு தனது வினையின் பயனை தானே எடுத்து நுகருவது என்கிற அறிவு இராது. மேலும் வினைப்பயனாக வரும் துன்பத்தை தானே சென்று அடைய விரும்பாது.

ஆகவே, அந்தந்த உயிர்கள் செய்த வினைகளின் பயனை, வினைசெய்த உயிர்களே அனுபவிக்க வேண்டியுள்ளதால், உயிர்களுக்கு அந்தந்த பயன்களைக் கூடாமலும், குறையாமலும் சேர்த்து அருளுவது இறைவனுடைய பெருங் கருணையாகும்.

நாம் செய்யும் கன்மத்தின் பயனை நாம் அனுபவிக்கவே மீண்டும், மீண்டும் பிறவிஎடுக்க வேண்டியுள்ளது. ஆகவே, கன்மத்தினாலாயே சரீரம் உண்டாகும் என்பர். முற்பிறவிகளில் செய்த கன்மத்தின் பயன் இப்போது எடுக்கும் சரீரசத்திற்கு காரணமாகும். கன்மம் இன்றி சரீரம் வராது. சரீரமின்றி கன்மம் நிகழாது. இவ்வாறே மேலும் மேலும் சென்றால் மூலகன்மம் என்ற ஒன்று உண்டு என்று அறியலாம். வாழ்க்கையே ஒரு வினைக்கடல் என்பதும் விளங்கும்.

ஆன்மா ஒரு சிற்றறிவுப் பொருள். இறைவன் பேரறிவுப் பொருள். ஆன்மாவுக்கு இறைவனைச் சார்ந்து நிற்றலே இயற்கை. ஆணவமலத்தால் உண்டாகும் அறியாமையால் உலகத்தைச் சார்ந்து நின்று, பலகன்மங்களைச் செய்து பல துன்பங்களை அனுபவிக்கின்றது. இந்த அறியாமை இருக்கும் வரை, உயிருக்கு உலகமே பெரிதாகத் தோன்றும்.

இந்த நிலை சற்று மாற கன்மமும், மாயையும் வழி செய்கின்றன. ஓரொரு சமயம், தான் பட்ட துன்பம் போதுமென்ற உணர்ச்சி உயிருக்கு ஏற்படும் போது, ஆணவமலம் மெலிவடைகிறது எனலாம். ஆன்மா, முற்பிறப்புகளில் இறைவனது திரோதனசக்தி, சிறிது சிறிதாக, மாறி அருட் சக்தியாகத் தோன்றி, உயிரின் ஞான வேட்கையைத் தூண்டிவிடும். சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய தவநெறிகளில் உயிரை ஈடுபடுத்தும் அருட்சக்தியின் பதிவால் உயிர், உலகப் பெருள்களின் உண்மைத் தன்மையையும், நிலையாமையையும் உணரத் தொடங்கும். உலக அனுபவங்களை மேலாகக் கருதும் எண்ணத்தை உயிர் தன்னிடமிருந்து மெல்ல, மெல்ல நீக்கிக்கொள்ளும். தவம் வளர, வளர உயிரும் பக்குவம் அடைந்து, சிவப்பரம் பொருள் மீது தனது அன்பினை முழுமையாகத்தரும். அப்போது, இன்பம், துன்பம் போன்றவற்றை சமமாகக் கருதும் எண்ணம் வளரும். இந்த நிலை இருவினை ஒப்பு எனப்படுகிறது. உண்மையை உணரும் பருவம் தோன்றும்போது, ஞானாசிரியன், இறைவன், திருவருளால் தோன்றுகின்றான். இறைவனே இவ்வாறு தோன்றி, உயிரின் பக்குவத்திற்கு உதவிசெய்கிறான் என்பதை, ''குருவே சிவமெனக் கூறினன் நந்தி'' என்பதிலிருந்து அறியலாம்.

''உடம்புகள் நிலையற்றவை. ஒன்று ஒழிந்தபின் மற்றொன்று தோன்றும். அது அழிந்தபின் வேறொன்று தோன்றும். இவ்வாறு உயிரை அலைக்கழிப்பது வினை என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும். உலகப் பொருள்களின் உண்மைத் தன்மயை உணர்ந்து கொண்டால் அவற்றின் மீதுள்ள விருப்பு, வெறுப்பு நீங்கும் அவற்றை எவ்வாறாகிலும் அடைய வேண்டும் என்ற நாட்டம் குறைந்து விடும் ஆகவே வினை மெய்யுணர்வால் கெடும் எனலாம். அது ஞானாசிரியன் அருளால் நிகழ்கின்றது என்பதை நாம் தெரிந்துகொள்வதில்லை. வினை நீக்கமே வீடுபேறு என்று மறைகள் கூறுகின்றன. அதையும் நாம் ஓதித்தெளிந்து கொள்வதில்லை. வினையிலேயே உழலுபவர்கள் பின்னர் வரும் எல்லையற்ற துன்பங்களை அறிவதும் இல்லை'' இவ்வாறு திருமூலர் அருளி, வினைகளைப் பற்றி நம்மை தீவிரமாக சிந்திக்கச்செய்கிறார்.

**''வினையால் அசத்து விளைவதுணறார்**
**வினை நாடலும் தல் வீடலும் தேரார்**
**வினை வீடவீ டென்றும் வேதம்மும் ஓதார்**
**வினையாளர் மிக்க விளைவறியாரே''**

(திருமந்திரம் 2557)

தொடரும்.

# அருள்மிகு குறுங்காலீஸ்வரர் திருக்கோயில்

## கோயம்பேடு சென்னை - 107

சென்னை, கோயம்பேடு என்ற திருத்தலத்தில் திருவருள் நிறைந்த சிவன் கோயில் என்ற ஞானப் பெட்டகம் உள்ளது. சிவப்பெருமான் திருநாமம் குறுங்காலீஸ்வரர் என்பதாகும். அம்பிகையின் திருநாமம் அறம் வளர்த்த நாயகி என்று வழங்கப்படுகிறது.

இத்திருக்கோயிலில் 48 மூர்த்திகள் உள்ளன. கல்வெட்டுகள் நிறைந்த பழம் பெரும் கோயிலாகும். இராமாயண இதிகாசத்தில் இக்கோயிலைப்பற்றி பேசப்பட்டுள்ளது. லவகுசா வரலாற்றின் ஒருபகுதி இங்கு இடம் பெற்றுள்ளது.

இத்தலத்திற்கு குசலவபுரம், ராகவபுரம், கோயட்டிபுரம் போன்ற எட்டு பெயர்கள் உள்ளன. வால்மீகி முனிவர் ஆசிரமம் அமைத்துத் தங்கி தவம் மேற்கொண்ட இடம் கோயம்பேடு. அவரது ஆசிரமத்தின்கண் இருந்த பசுக்களை இரும்பு வேலியிட்டு இலவன், குசன் காத்தமையால் கோயம்பேடு என்ற பெயர்பெற்றது.

குறுங்காலீஸ்வரன் திருக்கோயிலுக்கு அருகில் கிழக்கு நோக்கிய நிலையில் வைகுண்டவாசப் பெருமாள் திருக்கோயில் அமைந்துள்ளது. சைவமும், வைணவமும் இருவேறு பிரிவுகளாக இருந்த காலக்கட்டத்திலும் சிவனும், பெருமாளும் அருகருகே அமைந்து அன்று முதல் இன்று வரை சமய, ஒற்றுமையை எடுத்துக்காட்டுகிறது.

பொதுவாக திருக்கோயில்களில் சிவப்பெருமான் கிழக்குத் திசைநோக்கிய நிலையில் வீற்றிருப்பது இயல்பு. மாறாக குபேர திசையான வடதிசையை நோக்கி சிவப்பிரான் வீற்றிருப்பதால் இங்கு வழிபடும் அன்பர்களுக்கு ஐஸ்வர்யம் பெருகும் என்பது ஐதீகமாக கருதப்பட்டு வருகிறது.

கோபுரங்கள் பெரும்பாலும் உயர்ந்த நிலையிலேயே இருக்கும். அதற்கு மாறாக இத்திருக்கோயிலில் இருக்கும் இராஜகோபுரம் குறுகிய அளவு உடையதாக காட்சியளிக்கிறது. திருக்கோயில் பீடத்தில் அமைந்துள்ள ஆவுடையாருக்கு மேல் 4 அங்குல அளவில் மடக்கினை கவிழ்த்து வைத்தது போன்ற நிலையில் இருக்கும் லிங்கம் வேறு எங்கும் காண முடியாத ஒன்றாகும். இக்கோவிலை வழிபட்ட நமது முன்னோர்கள்,

''கோயம்பேடு என்ற ஊரும் இல்லை
குறுங்காலீஸ்வரர் என்ற பேரும் இல்லை
வடக்குப் பார்த்த சுவாமியும் இல்லை
மடக்குப் போன்ற இலிங்கமும் இல்லை''

என்று பெருமைப்பட கூறுவார்கள்.

தம்மை அன்போடு வழிபடுவோர்க்கு அருள்புரியும் அன்னையாக இருந்து அருள் புரிபவள் அறம் வளர்த்த நாயகி (தர்ம சம்வர்த்தினி) பூமலி உலகில் அறம் தழைத்து விளங்கவும், சிறப்புற்று ஓங்கவும் எழுந்தருளியவள். நான்கு திருக்கரங்களுடன் நின்ற கோலத்துடன் இடது திருவடி முன்னிறுத்திய நிலையில் அழகு திகழ் திருக்கோலத்துடன், வழிபடும் அன்பர்களுக்கு அருள்புரியும் மாட்சிமை பெற்றவள்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றும் சேர்ந்திருப்பது இத்தலத்தின் சிறப்பம்சங்களாகும். இத்தலத்தில் இராமனின் பிள்ளைகளான இலவனும், குசனும் இந்த சுயம்புலிங்கப் பிரானைத் தீர்த்தம் உண்டாக்கி வழிபட்ட சிறப்பும், நந்தியன் பெருமான் சித்தங் கலங்கிய நிலையில் வந்து வழிபட சித்தம் தெளிந்ததும் நந்தி மூக்கணாங்கயிற்றுடன் திகழ்வதும், ஆதிபிரதோஷம் முதன் முதலில் தொடங்கியதும் இத்தலத்தில்தான் என்றும் ஆன்றோர் பெருமைப்பட கூறுவார்கள்.

இராமபிரான் இராவணனோடு போரிட்டு வென்று பெரு நில மடந்தையாகிய சீதையை மீட்டான். இருப்பினும் உலகினுள்ளோர் பழி தூற்றுவர் எனக் கருதிக் கருவுற்ற நிலையில் சீதாப் பிராட்டியைக் கானகத்தில் கொண்டு வந்துவிட்டனர். இன்று நாம் காணும் கோயம்பேடு கானகமாக இருந்தபோது வால்மீகி முனிவர் ஆசிரமம் அமைத்து தியானம் செய்து வாழ்ந்து வந்த கானகத்தில் தனித்து விடப்பட்ட சீதையை வால்மீகி முனிவர் அழைத்து வந்து, ஒரு குறையும் நிகழா வண்ணம் போற்றி பாதுகாத்தார். சீதை,

இலவன், குசன் என்னும் இரு மக்கட் செல்வத்தை பெற்றெடுத்தார்.

மண்ணில் வளமுற வளர்ந்த இரு புதல்வர்களும் அழிவிலாச் செல்வமாம் கல்வியை வால்மீகி முனிவரிடம் பெற்றனர். அருங்கலைகள் பலவற்றைக் கற்றுக் கொடுத்த இடமும் சிறுவர்களாகிய இலவனும், குசனும் போற்றி வழிபட அருள்புரிந்த இடமே கோயம்பேடு.

அசுவமேத யாகம் செய்தற்பொருட்டு திக்கு விஜயம் செய்ய அனுப்பிய குதிரையை இலக்குவன் செலுத்தி வந்தான். பல திசைகள் கடந்து கோயம்பேட்டினை அடைந்தான். கானக காவலர்களாக இருந்த இலவன் குசன் ஆகிய இருவரும் திக்கு விஜயம் செய்து வருகின்ற அசுவமேதயாக குதிரையைத் தடுத்து நிறுத்திக் கட்டி போட்டனர். இலக்குவன் சிறுவன் தானே என்று எண்ணி அச்சுறுத்தினான். சிறுவர்கள் வலிமையோடு போரிட்டு வென்று இலக்குவனைத் தோல்வியுறச் செய்தனர். இதன் விபரம் இராமனுக்கு தெரிந்து, போர் படையுடன் கோயம்பேடு கானகத்துக்கு வந்தார். இலவ குசலர்களுடன் உரையாடி பேசுகின்ற போது கருத்து வேறுபாடு ஏற்பட்டு போரிட தொடங்கினார்கள். போர் புரிகின்ற போது ஏற்பட்ட பேரொலியில், யோக நிலையில் இருந்த வால்மீகி முனிவர் ஆசிரமத்திலிருந்து வெளியே வந்தார். ஞானி வால்மீகி கணப்பொழுதில், இராமபிரானே மனித வடிவில் வந்துள்ளார் என்பதை அறிந்து, போரிடும் சிறுவர்கள், தங்களது மைந்தர்கள் என்று இராமபிரானுக்கு அறிமுகம் செய்து வைத்தார். தந்தையை எதிர்த்து போரிட்டு தவறு செய்துவிட்டோமே என்று எண்ணி வருத்தம் அடைந்து, வால்மீகி முனிவரின் அறிவுரைப்படி சிவநெறி நின்று சிவலிங்க பூசையை மேற்கொண்டு பாவதோஷம் நீங்கப்பெற்றனர்.

இராமபிரானின் புதல்வர்களான இலவகுசர் சிவபெருமானை நோக்கி பூஜிக்க, அவர்களுக்கு சிவப்பெருமான் குறுகத்தரித்து குறுங்காலீஸ்வரராக காட்சி தந்தான் என்று புராண வரலாறு கூறுகிறது.

அருணகிரிநாதர் இங்கு எழுந்தருளிய முருகப்பெருமானை திருப்புகழில் பாடி போற்றியுள்ளார்.

இவ்வாலயத்தில் நூதன பஞ்சவர்ண



நவக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

அம்மன், சிவன் சந்நிதிக்கு முன்பு நாற்பது கல்மண்டபம் அமைந்துள்ளது. மண்டபத் தூணின் முகப்பில் இலவகுசர்கள் அசுவமேதயாகக் குதிரையைக் கடிவாளத்தோடு பிடித்த நிலையில் நிற்பது போன்ற கல்தூண் கலை நுட்பத்துடன் சிறந்து விளங்குகின்றது.

மூன்றாம் குலோத்துங்க சோழன் விசய நகர அரசரான வீரபுக்கராயர் முதலானவர்கள் திருக்கோயிலுக்கு பல திருப்பணிகள் செய்துள்ளனர்.

வைகுண்டவாசப் பெருமாள் கோயிலில் அர்த்த மண்டபத்தின் இடப்பக்கத்தில் வால்மீகி முனிவர் குசலவன் கோயேட்டி பறவை முதலான உருவங்கள் அமைந்த சிற்பம் உள்ளதால் இதிகாசகாலத்தோடு தொடர்புடையது என அறியலாம்.

ஆதி பிரதோஷ தலம், மூலசேத்திர தலம் என்று குறிப்பிடுவர். ஒரு பிரதோஷ தினத்தன்று குறுங்காலீஸ்வரரை வணங்கினால் 1000 முறை பிரதோஷதினம் வணங்கிய பலன் கிடைக்கும்.

நாமும் குறுங்காலீஸ்வரனை வழிபட்டு வாழ்வில் எல்லா வளமும் பெற்று வாழ்வாங்கு வாழ ஐயனை எண்ணத்தில் வைத்து வணங்குவோம்.



**தமிழ்நாடு அரசு**
**இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை**
**சென்னை–34.**

**ஸ்தபதி அங்கீகாரம் பெறுவது தொடர்பான அறிவிப்பு**

தமிழ்நாட்டில் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் கட்டுப்பாட்டில் உள்ள திருக்கோயில்களின் திருப்பணிகளில் கீழ்க்காணும் பணிகள் செய்திடத் தகுதி வாய்ந்த, அனுபவம் மிக்க ஸ்தபதிகளை கீழ்க்கண்ட வகைப்பாடுகளில் துறை அங்கீகாரம் செய்ய உள்ளது.

1. ஸ்தபதி (சிற்ப சாஸ்திரங்கள் கற்று கலை நுணுக்கத்துடன் கல்கோயில், கோபுரங்கள், மண்டபங்கள் செய்யத் தெரிந்தவர்கள், திருப்பணி செய்யத் தகுதியுடையவர்கள்)

2. ஸ்தபதி – மரவேலை (மரத்தேர், வாகனம், சப்பரம், கேடகம், துவஜஸ்தம்பம், கதவுகள் முதலியன செய்பவர்கள்)

3. சிற்பி (பழைய கோபுரங்கள், விமானங்கள், மண்டபங்கள் முதலியவற்றில் சுண்ணாம்பு காரை நீக்கி, பூச்சுவேலை செய்து பிரதிமைகள் செய்ய தகுதியுடையவர்கள், வண்ணம் செய்ய தெரிந்தவர்கள்)

4. சிற்பி – சித்திரம் (கோபுரம், மண்டபம் ரிப்பேர் வேலைகள், பஞ்சவர்ணம் தீட்டல், மண்டப சித்திரங்கள் செய்தல், வாகன வேலை, வண்ணம் தீட்டல் முதலியவற்றில் தேர்ச்சி பெற்றவர்கள்)

5. வண்ண ஓவியர் (விமானம், ராஜகோபுரம் ஆகியவற்றில் வண்ணம் பூசுபவர்)

| தகுதி | அனுபவம் |
|---|---|
| 1. மகாபலிபுரம் சிற்பக் கல்லூரியில்<br>அ. 1993–94 வரை பயின்றவராயின் 8 வருட படிப்பு<br>ஆ.1994–95 முதல் 1996–97வரை பயின்றவராயின் 6 வருட படிப்பு<br>இ. 2000–01 முதல் பயின்றவராயின் 4 வருட படிப்பு | குறைந்தது 5 வருடங்கள் பணி அனுபவம் |
| 2. வழிவழியாகவும் இன்னபிற வழியிலும் ஸ்தபதி தொழிலை அனுபவ ரீதியில் கற்று திறமை பெற்றவர்களாயின், 5 ஆம் வகுப்பு படித்திருக்க வேண்டும். எழுத படிக்க தெரிந்திருக்க வேண்டும். 30 வயதுக்கு குறையாமல் இருக்க வேண்டும். | குறைந்தது 10 வருடங்கள் பணி அனுபவம் |

விண்ணப்பதாரர்கள் தங்களது பெயர், முகவரி, வயது, கல்வித் தகுதிகள் மற்றும் அனுபவம் குறித்த விவரங்கள் (சான்று நகல்கள் இணைத்து) அடங்கிய விண்ணப்பங்களை சிறப்பு ஆணையர் மற்றும் ஆணையர், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, 119, உத்தமர் காந்தி சாலை, நுங்கம்பாக்கம், சென்னை–34 என்ற முகவரிக்கு 30.3.2007 மாலை 5.00 மணிக்குள் அனுப்பி வைத்திட வேண்டும்.

சிறப்பு ஆணையர் மற்றும் ஆணையர்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை
சென்னை–34.

# பாம்பன் குமரகுருதாசருக்கு காட்சி தந்த முருகன்



கி.பி. 1894-ம் ஆண்டு பங்குனி மாதம் சனிக்கிழமை 'பிரப்பன் வலசை' ஊரிலுள்ள மயானத்தில் ஆவ்வூர் கலெக்டர் உத்தரவு பெற்று மயானத்தில் கொட்டகை இட்டு சதுரக்குழிக்குள் அமர்ந்து குமர குருதாசர் தவம் தொடங்கினார். தவம் செய்த ஏழாம் நாள் இரு முனிவருடன் தண்டாயுதபாணி குமரன் வடிவில் வந்து ஓர் சொல் உபதேசம் செய்து மறைந்தார். தவம் தொடர்ந்து 28 ஆம் நாள் நீடித்தது. தவக்குழியிலிருந்து முருகன் கட்டளையின்படி எழுந்தார். அன்று வெள்ளிக்கிழமை சித்ரா பௌர்ணமி. பல நாட்களாக உணவு ஒழித்து நின்றது பெரும் வியப்பூட்டுவதல்லவா?

முருகன், குமரகுருதாசர் கனவில் தோன்றி சென்னைக்குச் செல் என்று கட்டளையிட்டார். எனக்கு சென்னையில் ஒருவரையும் தெரியாது எப்படி செல்வேன் என்ற எண்ணத்துடன் முருகன் ஆணைப்படி கி.பி. 1895. கார்த்திகை மாதத்திற்குப் பிறகு துறவு பூண்டு மதுரையிலிருந்து புகைவண்டியில் ஏறி சென்னை எழும்பூர் வந்து சேர்ந்தார். ஒருவர் ஸ்வாமிகளைக் கண்டு ஆனந்தமடைந்து அன்புடன் அழைத்து அவரை ஒரு குதிரை வண்டியில் ஏற்றிக் கொண்டு எண். 41, வைத்தியநாத முதலியார் தெரு, ஜார்ஜ் டவுன் வீட்டின் முன் விட்டுச் சென்றார். நின்றதும் திருமதி. பங்காரு அம்மையார் என்னும் அடியார் ஸ்வாமிகளைக் கண்டு தனக்கு முன்தினம் திருமுருகன் கனவில் தோன்றி ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகளை உபசரிக்க கட்டளையிட்டார் என்று கூறினார். அவ்வம்மையாரும் அப்படியே செய்தார். ஸ்வாமிகளும் அவர் உபசரிப்பில் சில நாட்கள் தங்கினார்.

கி.பி. 1923ம் ஆண்டு டிசம்பர் 27 அன்று தம்புச் செட்டித் தெரு வழியாக குமரகுருதாசசுவாமிகள் நடந்து வந்து கொண்டிருந்தபோது எதிர்ப்புறமாக வந்த ஒரு குதிரை வண்டி மோதியதால் சுவாமிகளின் இடக்கணைக்காலில் மேல் எலும்பு முறிவு ஏற்பட்டு அரசு பொது மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். உணவு முறை வயோதிகத்தின் காரணமாகக் கால் குணமாவது கடினம் என்று மருத்துவர்கள் கூறினர். சுவாமிகளைக் கண்டு துன்புற்ற நான்கு சீடர்கள் சண்முகக்கவசம் பாராயணம் பண்ணிக் கொண்டிருந்தனர். அச்சமயம் இரு வேல் முனைகள் காலை தூக்கி இருக்கும் நிலையிலும் மற்றொரு வேல் கால் உள் சென்று முறிந்த எலும்பை வைத்தியம் செய்வது போலும், இவருடைய சீடரான திரு.சின்னசாமி ஜோதிடருக்கு மட்டும் தெரிந்தது. தான் குணமாகும் நாள் வரை சென்னை அரசு பொதுமருத்துவமனையில் இருந்தார். 11-ம் நாளன்று இரவு இரு தங்க மயில்கள் தோகை விரித்து நடனமாடி வந்தன. மறுநாள் சுவாமிகளின் படுக்கையருகே குழந்தை ஒன்று படுத்து மறைந்தது. சுவாமிகளின் முறிந்த காலும் குணம் பெற்றுவிட்டதாகக் கூறி மருத்துவர்கள் வியந்தனர்.

ஆங்கில மருத்துவ பெண்மணி, இறைவன் மருத்துவம் செய்தார் என்று வியந்து ஸ்வாமிகளை வணங்கிச் சென்றார். என்னே முருகனின் திருவருள். இதனை நினைவுறுத்தும் விதமாக மயூரவாகன சேவன விழாவினை ஒவ்வோர் ஆண்டும் நமது மகாகுரு நடத்தி வந்தார். தற்போதும் மயூரவாகனசேவன விழா ஆண்டுதோறும் நடைபெற்று வருகிறது.

பாம்பன் குமரகுருதாசருக்கு திருவான்மியூரில் திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலில் நான்கு காலப் பூஜை நடைபெறுகிறது. இத்திருக்கோயிலில் மாதந் தோறும் பௌர்ணமி பூஜை இரவு 12 மணிக்கு நடைபெற்று வருகிறது. பல்லாயிரக்கணக்கான அடியார்கள் இப்பூஜையில் கலந்து கொண்டு ஐயன் திருவருளைப் பெற்றுச் செல்கிறார்கள். இத்திருக்கோயிலில் கீழ்கண்ட விழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

1. சித்ரா பௌர்ணமி
2. பாம்பன் சுவாமிகள் குருபூஜை
3. அருணகிரிநாதர் திருநாள்
4. கந்த சஷ்டி
5. மயூரவாகன சேவனம் விழா
6. மகாசிவராத்திரி விழா
7. பிரதி மாதம் பௌர்ணமி

**வேலும் மயிலும் துணை.**
**கந்தன் அருள் பெறுவோம்**
**மனக் கவலைகள் நீங்கப் பெறுவோம்.**

# அருள்மிகு சௌந்திரராஜப் பெருமாள் திருக்கோயில் தாடிக்கொம்பு

தெலுங்கில் தாட்டி என்றால் பனை மரம் என்று பொருள் கும்புலு என்றால் கூட்டம் என்று பொருள். தாட்டிகும்புலு மருவி தாடிகும்பு என்று மாற்றம் ஏற்பட்டு தற்பொழுது தாடிக்கொம்பு என்றானது.

பனை மரங்கள் சூழ்ந்து உள்ள இவ்வூரில் குடகனாறு ஆற்றங்கரையில் முனிவர் ஒருவர் சாபத்தால் மண்டுகமாக(தவளையாக) மாறி சாபவிமோசனத்திற்கு மதுரை திருமாலிருஞ் சோலை கள்ளழகரை நோக்கி வருத்தி தவம் இருந்த சூழ்நிலையில், தாளசுரன் என்கிற அசுரனால் மண்டுக முனிவருக்கு இடையூறு விளைவித்த அசுரனை வதம் செய்து, முனிவரின் வேண்டுகோளை ஏற்று இவ்வூரில் சேவை சாதிக்கின்றார்.

14ம் நூற்றாண்டு விஜய நகர பேரரசு ஆட்சி காலத்தில் அச்சுததேவராயரால் இத்திருக்கோவில் கட்டப்பட்டது, சிற்பக்கலைக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் கோவில்களில் தாடிக்கொம்பும் ஒன்றாகும், சிற்பக் கலையில் சிறப்பு மிக்க இத்திருக்கோவிலின் உள்பிரகாரத்தில் 1.விஸ்வக்ஷேனா 2.நம்மாழ்வார் 3.இரட்டை வினாயகர் (தும்பிக்கை ஆழ்வார்) 4.தசவதாரம் மூர்த்திகள் 5.தன்வந்திரி 6.லட்சுமி நரசிம்ம சுவாமி 7.ஆண்டாள் 8.ருக்மணி சத்தியபாமா சமேத வேணுகோபால சுவாமி 9.ஆஞ்சநேயர் 10.சேத்திரபாலகர் (எ) சொர்ண ஆகர்ஷண பைரவர் ஆகியோர் அருள்பாலிக்கின்றனர்.

வெளிபிரகாரத்தில் கன்னிமூலையில் ஸ்ரீசக்கரத்தாழ்வார் சன்னதியும் அமைந்துள்ளது.

**மூர்த்திகள் சிறப்புகள்**

**ஹயக்ரீவ மூர்த்தி :** தசவதார சன்னதியில் ஹயக்ரீவமூர்த்தி உள்ளார். கல்வி, ஞானம் மேம்பட திருவோண நட்சத்திரத்தன்று தேன் அபிசேகம் செய்து குழந்தைகளுக்கு கொடுத்தால் கல்வி ஞானம் மேம்படும்,

**தன்வந்திரி :** அமாவாசைதோறும் மாலை 7.00 மணி அளவில் திருமஞ்சனம் செய்து அவருக்கு நெய்வேத்தியமாக படைத்த லேகியம் மற்றும் அபிசேகத்தைலம் கிடைக்கிறது, நோயற்ற வாழ்வை வழங்கும் அருள் தன்வந்தரி பெருமாளுக்கு மட்டுமே உண்டு.

**லெட்சுமி நரசிம்ம சுவாமி :** கடன் தொல்லையிலிருந்து நம்மை காத்து மனதில் உள்ள சங்கடங்களை போக்கும் சுவாமி. பௌர்ணமி பிரதோஷ காலங்கள் மற்றும் சுவாமி நட்சத்திரம் ஆகிய நாட்களில் மாலை 7.00 மணி அளவில் சிறப்பான பூஜை உண்டு.

**ஆண்டாள் - ரதிமன்மதன்:** திருமணம் நடைபெற தடை ஏற்பட்டு கொண்டு இருந்தால் ஐந்து வியாழக்கிழமை இங்கு நடைபெறும் பூஜையில் சம்பந்தப்பட்ட ஆண்கள் - பெண்கள் கலந்து கொண்டால் தடை நீங்கி விரைவில் மணவாழ்க்கை அமைகிறது.

**வேணுகோபாலசுவாமி :** ரோகிணி நட்சத்திரம் அன்று நடைபெறும் பூஜையில் சந்தான பாக்கியம் (குழந்தை பேறு) வேண்டி பூஜை செய்யும் தம்பதிகளின் மடியில் நவநீத கிருஷ்ணன் விக்ரகம் இருக்கச் செய்து பிராத்தனை செய்து கொள்ளலாம்.

**சேத்திரபாலகர் (எ) சொர்ண ஆகர்ஷண பைரவர் :** பொருளாதார சிக்கலால் ஏற்படும் தடை நீங்கவும், மற்றவரால் ஏமாற்றப்பட்டு இழந்த சொத்துகள், செல்வங்கள் மீண்டும் பெற்றிடவும், சனிஸ்வர பகவனால் ஏற்படும் கஷ்டங்கள் நீங்கவும், தேய்பிறை அஷ்டமி பூஜை(காலை 11.00 மணி மதியம், மாலை 6.00 மணி, இரவு 7.30மணி)யில் கலந்து கொண்டு பிரார்த்தனை செய்து கொள்ளலாம்.

**சக்கரத்தாழ்வார் :** வாழ்க்கை என்னும் சக்கரத்தில் ஏற்படும் இன்னல்கள் தொழிலில் ஏற்படும் பிரச்சனைகள் நீங்க புதன்கிழமை மற்றும் சனிக்கிழமைகளில் பிராத்தனை செய்து கொள்ளலாம்.



**ஸ்ரீ கல்யான சௌந்தரவல்லி தாயார் சன்னதி**

பக்தர்களின் பிரார்த்தனைகள் அனைத்தும் பெருமாளிடம்

பரிந்துரைத்து விரைவில் நமது இஷ்ட காரியங்களை நடைபெற அருள்புரிகிறார். பிரதி வெள்ளிக்கிழமை திருமஞ்சனம் நடைபெறுகிறது.

இத்திருக்கோவில் தாயார் சன்னதி மண்டபத்தில் பக்கத்துக்கு ஏழு தூண்கள் வீதம் இரண்டு பக்கமும் 14 தூண்கள் சுமார் 15 அடி உயரத்தில் மண்டப தூண்களாக ஒவ்வொரு தூணும் ஒரே கல்லில் அமைந்துள்ளது.

ஒவ்வொரு தூணிலும் கலை நயம் மிக்க சிற்பக்கலைக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளது.

**சக்கரத்தாழ்வார் :** பெருமாளின் ஐந்து ஆயுதங்களில் ஒன்றாக உள்ள ஸ்ரீசக்கரத்தாழ்வார் மிகவும் பெரிய அளவில் இங்கு தான் காணமுடியும். கழுத்தில் உள்ள சுருக்கங்கள், விலா எலும்புகள், வயிற்று பகுதி, கணுக்கால் தசைபகுதிகள், நகம், முழங்கால் மூட்டுகள் என உடம்பு அவையங்கள் மிகவும் தத்ரூபமாக உள்ளன.

**கார்த்த வீர்ய அர்ஜீனர் :** ஸ்ரீசக்கரத்தாழ்வாரின் அம்சமாக பூலோகத்தை காக்கும் பொருட்டு அனுப்பப்பட்டவர். இராஜ கம்பீரத்துடன் தோற்றமளிக்கும் இவர் சிற்பத்தை காணும் போது திருமுக மண்டலத்தில் மீசை, மார்பு, கை, கால் மிகவும் கம்பீரமாக இருக்கும், களவு போன பொருள்கள் இவரிடம் முறையிடுவதன் மூலம் திரும்பப் பெற இயலும்.

**மஹாவிஷ்ணு :** பக்தர்களைக் காக்க தயார் நிலையில் உள்ளது போல் கருட வாகனத்தில் மஹாவிஷ்ணு அமர்ந்து இருப்பது திருமுக மண்டலத்தில் உள்ள தெய்வீக தேஜஸ், நாம் நேரில் பெருமாளை தரிசிப்பது போல் இருக்கும்.

**வைகுண்டநாதன் :** ஆதிசேஷன் மேல் சுவாமி அமர்ந்து காட்சி அளிக்கின்றார். சிற்பத்தில் உள்ள உடம்பின் மற்ற அவையங்களை தொடும் போது ஏற்படும் உணர்வை விட உள்ளங்காலை தொடும் போது ஏற்படும் உணர்வு வித்தியாசமாக உள்ளது.


சக்கரத்தாழ்வார்


கார்த்த வீர்ய அர்ஜீனர்


ராமர்

**ராமர் :** அனுமன் ராமரை தோளில் தூக்கும் காட்சி. அனுமன் ராமரை மிகவும் சிரமப்பட்டு தூக்கினால் ஏற்படும் உணர்வை அனுமனின் கணுக்காலில் உள்ள தசைவிரிப்பு, ராமர், அனுமனின் தோளில் அமரும் போது இடுப்பில் உள்ள சதைப் பகுதி சுருக்கங்கள் மிகவும் நேர்த்தியாக அமைந்துள்ளது.

**அகோர வீரபத்திரசுவாமி:** சைவ வழிபாட்டில் உள்ள சிவபெருமான் கஜமுகேஸ்வரனை அழிக்க ஏற்று கொண்ட அவதாரமே இவர்.

**காளி**

**ஊர்த்த தாண்டவர் :** பரத நாட்டியத்தில் யார் சிறந்தவர் எனக் காணும் நிகழ்ச்சியில் ஊர்த்தவதாண்டவர் தனது வலதுகாதில் உள்ள காதணியை கீழே விழச்செய்து தனது காலில் எடுத்து போட்டுக்கொள்வார். காளி அந்த முத்திரையை செய்யமுடியாத சூழ்நிலை ஏற்பட்டு போட்டியில் தோற்றதால் ஏற்படும் முகபாவத்தையும், வெற்றி பெற்ற ஊர்த்தவ தாண்டவரின் திருமுக மண்டலத்தில் உதட்டில் உள்ள வெற்றி புன்னகையும் மிகவும் நேர்த்தியானது.

**யுத்தநரசிம்மசுவாமி**

**சம்ஹார நரசிம்ம சுவாமி :** இரண்யனை வதம் செய்யும் நிகழ்ச்சியை நேரில் காண்பது போல் இருக்கும் மல்யுத்தம் செய்து கொண்டு முடிவில் இரண்யனை சுவாமி வதம் செய்யும் போது விஸ்வரூபமாக மாறி காட்சி அளிக்கின்றார் இரண்யனின் வரத்தின்படி வதம் செய்த நிகழ்ச்சி, சுவாமியின் நகங்கள், இரண்யனின் உடல் பகுதியில் இறங்கி இருப்பது, சுவாமியின் திருமுக மண்டலத்தின் முக பாவத்தை பார்க்கும் போது தனது பக்தர்களை யார்


ஊர்த்த தாண்டவர்

சிரமப்படுத்தினாலும் அவரது கோபக்கனலில் இப்படித்தான் இருக்கும் என நினைக்க தோன்றுகிறது.

**மன்மதன் ரதி :** ஆண்களுக்கு முகத்தில் அழகு மீசை, கிருதா என்பது மன்மதனின் முகத்தில் வடிவமைத்து இருப்பதிலிருந்து தெரிகின்றது. பெண்மையின் பூரிப்பு ரதியின் திருமுக மண்டலத்தில் தெரிகிறது.

**வேணுகோபாலசுவாமி :** குழல் வாசிப்பது போன்று பாவனை திருமுக மண்டலத்தில் தெரிகிறது. இச்சிற்பம் உலோகத்தில் செய்தது போன்று மிகவும் அற்புதமாக உடம்பின் அவையங்கள் கல்லால் வடிவமைக்கப்பட்டுள்ளது.

**உலகளந்த பெருமாள் :** வாமனரூபத்தில் மூன்றடி கேட்பது, பின்பு விஸ்வரூபமாக மாறி உலகத்தை அளவெடுப்பது போன்றவை சிற்பத்தில் வடிவமைக்கப்பட்டுள்ளது. மிகவும் அருமையான கலை நயம் மிக்க வேலைப்பாடு ஆகும்.

**இசைத்தூண்கள் :** ஒரே தூணில் சிறியதாக எட்டு தூண்கள் பிரித்து ஒவ்வொரு தூணிலும் வெவ்வேறு இசையை கேட்பது போன்று அமைக்கப்பட்டுள்ளது. நின்ற விநாயகர் சிற்பம் வடிவில் வேறு எங்கும் இவ்வளவு உயரத்தில் காண முடியாதளவு அமைந்துள்ளது சிறப்பம்சமாகும்.

பெருமாளுக்கு தினசரி காலை சந்தி. உச்சிகாலம் கட்டளைதாரர்கள் பூஜை பிரார்த்தனை வெள்ளி ரதம் உண்டு, வைசாசி 1ந் தேதி, ஆவணி 1ந் தேதி, கார்த்திகை 1ந்தேதி, மாசி 1ந்தேதி விஷ்ணுபதிபுன்ய கால பூஜை நடைபெறுகிறது.

முக்கியவிழாக்கள்

சித்திராபௌர்ணமி உற்சவம்,

ஆடி பௌர்ணமி பெருந்திருவிழா,

ஆடிபூரம் - பெருமாள்ஆண்டாள்,

புரட்டாசி - சனிவாரங்கள்,

புரட்டாசிதிருவோணம் - இலட்சஅர்ச்சனை,

கார்த்திகை ரோஹிணி - இலட்சதீபம்,

மார்கழி - தனூர் பூஜை, வைகுண்ட ஏகாதசி ஆங்கில புத்தாண்டு,

பங்குனியில் - பெருமாள் ஸ்ரீசௌந்தரவல்லி தாயார் திருக்கல்யாண வைபவங்கள்சிறப்பாக நடைபெறுகிறது.

வேண்டுவோர்க்கு வேண்டிய வரங்களை வாரி வழங்கி பக்தர்கள் அனைவரையும் காத்து அருள்பாலித்தும், அழகர் என்றும் வணங்கப் பெறும் பெருமாளின் அருள்பெறவும், கலை நுணுக்க வேலைப்பாடுகள் நிறைந்த சிற்பங்களைக் கண்டு மகிழ்ந்திடவும், நாமும் திண்டுக்கல் - சேலம் தடத்தில், திண்டுக்கல்லிருந்த 10 கி.மீ தொலைவிலுள்ள தாடிக்கொம்பு சென்றிடலாமே.




சிறப்பாசிரியர் மற்றும் வெளியிடுவோர் : திருமிகு த. பிச்சாண்டி, இ.ஆ.ப., சிறப்பு ஆணையாளர் மற்றும் ஆணையாளர்
: தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை, சென்னை - 600 034. தொலைபேசி : 28334811/12/13
ஆசிரியர் (கூ.பொ.) : ம. தேவேந்திரன், பி.எஸ்சி., பி.எல்., உதவி ஆணையர்
அச்சிடுவோர் : குணசுந்தரி மாடர்ன் ஆர்ட் பிரிண்டர்ஸ், சென்னை -21. தொலைபேசி : 25967929

# அருள்மிகு இராஜகோபாலசுவாமி திருக்கோயில்

மன்னார்குடி, திருவாரூர் மாவட்டம்



## பங்குனிப் பெருவிழா அழைப்பிதழ்

ஸ்ரீ மதே ராமானுஜாய நம: ஸ்ரீ வாதுல குரவே நம:

உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள் அவனையல்லால்
நும்மிச்சைசொல்லி நும்தோள் குலைக்கப்படும் அன்னைமீர்
மன்னப்படும் மறைவாணனை வண்துவராபதி
மன்னனை ஏத்துமின் ஏத்துதலும் தொழுதாடுமே

திருமாமகள் தன் கணவனாய், நினைத்ததை நிறைவேற்றும் பேராற்றல் பெற்றவனாய் அகில உலகிற்கும் அதிபதியாய், கல்யாண குணங்கள் அனைத்திற்கும் இருப்பிடமாய் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ வைகுந்தநாதனான ஸர்வேச்வரன் தன் விளையாடல்களைப் புரிந்த இந்தப் பூஉலகில் உலக வாழ்வெனும் கடலுள் அழுந்தி தவிப்போரைக் கரைசேர்ப்பதற்காக சம்பகாரண்யம் (அ) செண்பகக் காடு எனும் திருத்தலத்தில் தென்துவாரகை என்கிற ஸ்ரீ ராஜமன்னார் சன்னதியில் கிருதயுகத்தில் பிரும்மாவுக்கும், திரேதா யுகத்தில் பிருகு மகரிஷிக்கும் இலக்குமிக்கும் துவாபரா யுகத்தில் அக்னிக்கும் கோபில, கோப்ரளய மகரிஷிகளுக்கும், கலியுகத்தில் ராஜசேகர மகாராஜாவுக்கும் சேவைஸாதித்து குணபாலமதயனாய் என்று பின்னனார் வழங்கும் சோதியாய் அவனடியார் கூட்டத்தின் தலைவரான ஸ்ரீ நம்மாழ்வாரால் வண்துவராபதி மன்னன், மணிவண்ணன், வாசுதேவன், மணியில் அணிநிறமாயன் என்று மங்களா சாஸனம் செய்யப்பட்டு ஸ்வயம்புவ விமானத்தில் நித்தியா ஸாந்நித்யம் செய்தருளுகின்ற வானிளவரசு, வைகுந்தக்குட்டன் வாசுதேவன் மதுரை மன்னன் நந்தகோபனிளவரசு கோவலகுட்டன் கோவிந்தனான கண்ணபிரான் ஸ்ரீராஜகோபாலசுவாமிக்கு நடக்கவிருக்கின்ற பிருமோற்சவத்தில் கோபில, கோப்ரளய மகரிஷிகளுக்கு சேவை சாதித்து, நாளது விய வருடம் மாசி மாதம் 24 ஆம் தேதி 08.03.2007 தொடங்கும் பங்குனிப் பெருவிழா மற்றும் விடையாற்றி கலைவிழாவை காட்சி கண்டு பக்தகோடிப்பெருமக்கள் உள்ளம் களித்துய்யுமாறு வேண்டுகிறோம்.

இத்திருவிழா 18 நாட்கள் உற்சவமும் 12 நாட்கள் விடையாற்றிக் கலைவிழாவும் நடைபெறுவது தனிச்சிறப்பாகும்.

### முக்கியத் திருநாட்கள்

| தமிழ் தேதி | | ஆங்கிலத்தேதி | முக்கியத் திருநாட்கள் விபரம் |
|---|---|---|---|
| மாசி | 24 | 08.03.2007 | கொடியேற்றம் - கொடிச்சப்பரம் |
| | 28 | 12.03.2007 | பஞ்சமுக உறனுமார் வாகனம் |
| பங்குனி | 3 | 17.03.2007 | தங்கசூர்யபிரபை |
| | 4 | 18.03.2007 | சேசவாகனம் |
| | 5 | 19.03.2007 | தங்க கருட வாகனம் |
| | 6 | 20.03.2007 | வெள்ளி அனுமந்தவாகனம் |
| | 7 | 21.03.2007 | யானை வாகனம் |
| | 9 | 23.03.2007 | வெண்ணைத்தாழி இரவு தங்ககுதிரை வாகனம் |
| | 10 | 24.03.2007 | கிருஷ்ணதீர்த்த தெப்பம் |

இப்படிக்கு

**பொன்.நந்தகோபால் எம்.ஏ.**
நிர்வாக அதிகாரி

**அ.சுப்பையா**
அறங்காவலர் குழுத்தலைவர்

**என்.ரெகுநாதன்　கே.எஸ்.அன்பழகன்**
**பா.அன்னபூரணி　பி.சி. தங்கராஜன்**
அறங்காவலர்கள்

பதிவு எண் : TN / PMG / (CCR) / 707 / 06-08 / WPP No. 451/06-08

# அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்



## திருப்பரங்குன்றம்
## (முதற்படைவீடு)

மதுரை - 625005. தொலைபேசி எண். 0452-2482248, 2484359.

''சந்ததம் பந்தத் தொடராலே
சஞ்சலம் துஞ்சித் திரியாதே
கந்தனென் றென்றுற் றுனைநாளும்
கண்டு கொண் டன்புற் றிடுவேனோ
தந்தியின் கொம்பைப் புணர்வோனே
சங்கரன் பங்கிற் சிவைபாலா
செந்தில் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றிற் பெருமாளே''

- அருணகிரிநாதர்

பாண்டிய நாட்டின் பதினான்கு பாடல் பெற்ற சைவத்தலங்களுள் இத்தலம் 9-வது திருத்தலம் ஆகும். முருகப் பெருமான் ஆறுபடை வீடுகளில் முதற்படை வீடு என சிறப்புற்று விளங்கி வரும் இத்தலத்தில்தான் முருகப் பெருமான் தெய்வானையுடன் திருமணம் செய்து மணக் கோலத்துடன் பக்தர்களுக்கு காட்சி அளிக்கின்றார்.

இத்தலத்தே எழுந்தருளியுள்ள சிவபெருமானை திருஞான சம்பந்தரும், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தேவாரப் பதிகங்கள் பாடிப் போற்றியுள்ளனர். அருணகிரிநாதர் தன் திருப்புகழில் இத்தலத்தில் குடிகொண்டிருக்கும் முருகப் பெருமானைப் போற்றிப் பாடியுள்ளார்.

கி.மு. இரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்ட பழமை உடையது இத்திருக்கோயில்.

சத்திய கிரீஸ்வரர் கிழக்கு நோக்கியும், பவளகக்னிவாய் பெருமாள் சிவபெருமானை நோக்கியும், முருகப்பெருமான், துர்க்கை மற்றம் கற்பகவிநாயகர் வடக்கு நோக்கியும் அமைந்துள்ள அற்புத குடவரைக் கோயிலாகும்.

### பங்குனித்திருக்கல்யாணத் திருத்தேர் பெருவிழா - அழைப்பிதழ்

இத்திருக்கோயிலில் முருகப்பெருமானுக்கு இவ்வாண்டு பங்குனிப் பெருவிழா 23.3.2007 முதல் 7.4.2007 முடிய நடைபெறவிருக்கின்றது. இவ்விழாவில் அனைத்துப் பெருமக்களும் கலந்துகொண்டு முருகப்பெருமானின் திருவருளைப் பெற்றுய்ய அன்புடன் அழைக்கின்றோம்.

| | | |
|---|---|---|
| 06.04.2007 | - | திருக்கல்யாணம் |
| 07.04.2007 | - | திருத்தேர் - வடம் பிடித்தல். |

இத்திருக்கோயிலில் சுமார் ஒன்றேகால் கோடி ரூபாயில், 11 அடி உயரத்தில், 11கிலோ தங்கம், 25 கிலோ வெள்ளி, 25 கிலோ தாமிரத்தில் தங்கரதம் செய்யப்பட உள்ளது. இவ்வரிய திருப்பணியில் அனைவரும் பங்கு கொண்டு தங்கமாகவோ/ ரொக்கமாகவோ திருக்கோயில் பெயரில் நன்கொடைகள் வழங்கிட வேண்டுகிறோம்.

**திருப்பரங்குன்றம் வருக!** **முருகனருள் பெறுக!**

**பி. விஜயராகவன்.பி.ஏ**
தலைவர், அறங்காவலர்குழு

**சி. பெருமாள்சுவாமி**, எம்.ஏ, எம்.பில், பிஎல்
துணை ஆணையர்/ நிர்வாக அதிகாரி

**வி.வி.மாணிக்கம், சி.சின்னம்மாள், எஸ்.காளியப்பன், பி.விஜயன்**
அறங்காவலர்கள்